ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசார்ய ஸ்வாமியின்
ஸ்ரீஸூக்தியான

# ஜகதாசார்ய ஸூக்திஸுதாநிதி

ஸ்ரீவசநபூஷண முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தி விரோத விவாதத்தில் ஸ்ரீகாஞ்சீபுரம்ஸ்வாமியின் நிரூபணங்களைப் பண்டிதர்களும் மற்றையாரும் எளிதாகத் தெரிந்து கொள்ளும் பொருட்டு

கள்ளக்குறிச்சி அட்வகேட்
T. ஆராவமுதுதாதாசாரியரால்
தொகுத்து வெளியிடப்பட்டது.

கிடைக்குமிடம்:
க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்

விலை 0—8—0

மன்மதஸூ ஆடித்திருமூலம்

1955

ஸ்ரீமத். உ. வே. ந்யாய வேதாந்த வித்வான்.
காரப்பங்காடு. வேங்கடாசார்ய ஸ்வாமியின் ஸ்ரீமுகம். 10-3-1951.
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## " ஜகதாசார்யர் "

பெரியவாச்சான் பிள்ளை அநுக்ரஹித்த ஸகல அருளிச்செயல்களின் வ்யாக்யாநங்களையும், ஸ்ரீ ராமாயணத்தில் பல பல ச்லோகங்களுக்கு இன்சுவையே வடிவெடுத்த வ்யாக்யானங்களையும் ஸ்தோத்ர ரத்நாதி வ்யாக்யாநங்களையும் அநுபவிக்குங்கால் ஸ்ரீ வைஷ்ணவ உலகத்திற்கு இம்மஹான் செய்த மஹோபகாரங்கள் அதிப்ரஸித்தங்களென்று உபபாதித்துச் சொல்லவும் வேண்டுமோ?

மணவாள மாமுனிகள் 'வள்ளல் வடக்குத் திருவீதிப் பிள்ளை' என்று அருளிச் செய்திருக்கிறார். ஸமகாலத்திலவர்களை யொழிய, பின்புள்ளாரும் அறிந்து உஜ்ஜீவிக்கும்படி ஈடுமுப்பத்தாறாயிரம் என்னும் க்ரந்தத்தை உபகரித்த ஔதார்யத்தையே புகழ்ந்து வள்ளல் என்னும், ஆழ்வார் ஊருநாடுமுலகமும் தம்மைப் போலிருக்கும்படி திருவாய்மொழிபாடினாற்போல் இவர் நாடறிய ஈடுநன்குறைத்தது என்றும் கொண்டாடுகிறார்.

இவ்வாறு தாமும், தமக்கு நயநத்வயமான சிஷ்யர்கள் முகமாகவும் ஸ்ரீ வைஷ்ணவ உலகத்திற்குப் பரமோபகாரத்தைச் செய்தருளிய ஜகதாசார்யரான நம்பிள்ளையின் திருவவதாரமே ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதியா யெழுந்தருளியிருக்கிற காஞ்சீப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி என்னும் விஷயம் உலகறிந்ததேயாம்.

நம்பிள்ளை ஸகல சாஸ்த்ரங்களையும் வரியடைவே கற்றறிந்து அந்தப்பாண்டித்யம் முழுவதையும் அருளிச் செயலுபந்யாஸங்களிலே உபயோகப்படுத்தி வந்தார் என்பது ப்ரஸித்தம். பெரியவாச்சான் பிள்ளை வடக்குத் திருவீதிப் பிள்ளை ஆகிய இம்மஹான்களின் அருளிச்செயல் வ்யாக்யாநங்களிலும் ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் நாமனுபவிக்கிறோம்.

நம் ப்ரதிவாதிபயங்கரம் ஸ்வாமி உபந்யாஸங்களிலும், பெரியவாச்சான் பிள்ளையைப் போலவே உபகரித்த திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை என்னும் அருளிச்செயல் வ்யாக்யானங்களிலும் பஞ்சஸ்தவம் முதலான ஸ்தோத்ர வ்யாக்யானங்களிலும் ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் ப்ரத்யக்ஷமாக அநுபவிக்கும்படி பாக்யம் பெற்றுள்ள நமக்கு ஸ்ரீ ஸ்வாமியின் அவதாரத் தன்மை ப்ரத்யக்ஷஸித்தம்.

ஸ்ரீ ஸ்வாமி இவ்வுலகில் எண்ணிறந்த ஷஷ்டி அப்தபூர்த்தி மஹோத்ஸவங்களைக் கண்டருளி ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயை ப்ரவசன முகங்களாலும் க்ரந்த முகங்களாலும் ஓங்கித்தழைக்கச்செய்து எழுந்தருளியிருக்க ஸ்ரீ பார்த்தஸாரதி அருள்க.

வெங்கடாசாரி, காரப்பங்காடு.

# AN APPEAL

Sri. V. RAJAGOPALACHARI, M. L.

*Advocate.*

2, Dr. Muniappa Road, Kilpauk.

For some weeks past the public mind among Asthikas in Madras and possibly also in some other places has been stirred by the circulation of a pamphlet purporting to have been published by some members of Sri. Karappangadu Venkatachariar Swami's Ghoshti but not subscribed to by any one in particular, touching the controversy about the supposed inconsistencies in Sri. Pillai Lokachariar's treatises relating to DROUPATHI SARANAGATHI. It is stated that the said pamphlet while seeking to support and maintain Sri. Karappangadu Swami's views on the subject, which as his admirers and members of his Ghoshti they are perfectly entitled to do, has gone further in making personal attacks on Sri. P. B. Annangarachariar Swami and showering abuses upon him for raising the controversy and expounding the opposite view. I have not myself seen the pamphlet in question and I am therefore unaware of the nature and extent of the alleged vituperation and I have no desire to see it either. I have come to know about it from the indignation it has aroused among many devotees of Sri. P. B. A. Swami and some others. As regards the merits of the rival views on the subject only Scholars well versed in the Ubaya Vedanthas could speak. The rival views have been brought out very clearly to English Educated Minds in the article on the subject by Sri. T. Aravamudu Thathachariar Swami, Advocate, Kallakurichi, whose Scholarship on such matters is well known and it is left to most of us to adopt any view which commends itself to our reason and common sense. It is but perhaps natural for the members of the Goshti of Sri. Karappangadu Swami to feel that their Swami is right; but there appears to be no reason to entertain any heat over the subject or transcend the limits of fair criticism. It is common knowledge that Sri. P. B. A. Swami never hesitate to express his views on any controversial subject and spread

correct ideas without fear or favour. So long as we have freedom and liberty of thought controversies of such nature are likely to arise among thinking men of learning and scholarship. Such controversies should be carried on at a high level and should conform to certain accepted standards and should never descend to personal abuse. It is not unreasonable to conclude that argument has failed when people are constrained to resort to personal abuse. Many of us are also admirers of Sri Karappangadu Swami and there is no doubt he would himself dissociate completely from the alleged offending publication if he comes to know how it has wounded the feelings of the many devotees of Sri. P. B. A. Swami. Even otherwise Sri. P. B. A. Swmi's matchless and manifold services to the cause of Vaishnavism for the past many years are too well known and the reverence and esteem in which he is rightly held by many thousands of people all over the country are not likely to be affected in the least degree by such abusive outbursts from any quarter, much less from an annonymous source. It is well known among those familar with the writings and discourses of the Swamiji that he holds strongly to the view that great Savants and Sages would never make inconsistent statements and he has always endeavoured to reconcile any seeming inconsistencies. There is no reason for the admirers and followers of Sri P. B. A. Swamiji to be disturbed or excited over the matter. The pamphlet is best ignored and needs no refutation. Futher publicity need not be given to it. I would also appeal to the Swamiji most earnestly that this controversy should now end atleast on his side unless invited by scholars of acknowledged and unquestioned repute. Both the Swamiji are good and great men and are labouring for the same cause. While each may stick to his views no handle should be given to any one to exploit any seeming differences between them over, what is after all, a mere matter of opinion.

Madras,
Dated 1st Aug. '55.

Sd. V. Rajagopalchari.

சென்னை பிரபல அட்வொகேட்
## ஸ்ரீமான் உவே. V. ராஜகோபாலாசாரியார் சுவாமிகள்
(கீழ்ப்பாக்கம்) அவர்களின் [மேலே பிரசுரித்த] ஆங்கில வியாஸத்தின் மொழிபெயர்ப்பு :—

## ஓர் வேண்டுகோள்

சென்ற சில வாரங்களாய் சென்னையிலும் மற்ற விடங்களிலு முள்ள ஆஸ்திகர்களிடையே த்ரௌபதீசரணகதி விஷயமாய் பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீஸூக்திகளில் முரண்பாடு இருப்பதுபோல் நடைபெற்றுவரும் விவாதத்தில் ஸ்ரீ காரப்பங்காடு ஸ்வாமியின் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் அநாமதேயமாகப் பிரசுரம் செய்திருக்கிற ஓர் அறிக்கையானது பரபரப்பை விளைத்துவருகிறது. அந்த வெளியீடானது காரப்பங்காடு ஸ்வாமியின் அபிப்ராயத்தை ஸித்தாந்தப் படுத்தும் முறையில் மட்டும் அமைந்திருந்தால் அந்த ஸ்வாமியைப் போற்றும் கோஷ்டியினர்க்கு மிகவும் பொருத்தமாகும். அத்துடன் நிற்காமல், ப்ரக்ருத விஷயத்தில் ஏற்பட்டிருக்கும் அபிப்ராய பேதத்தை முன்னிட்டு ஸ்ரீமத் P. B. A. ஸ்வாமியைப்பற்றின் தூஷணோக்திகளில் அந்த வெளியீடு இறங்கியிருப்பது அதிக்ரமமானது. அந்த தூஷண பத்ரிகையை நான் பார்க்கவில்லை. அதில் வெளிவந்திருக்கும் தூஷணங்களின் ஸ்வபாவத்தையோ அளவையோ நான் அறியேன். அதைப் பார்க்கவும் எனக்கு விருப்பமில்லை. P. B. A. ஸ்வாமியின் பக்தர்களுக்கும் மற்றவர்களுக்கும் அந்த வெளியீடு மனக்கசப்பை விளைவித்திருப்பதிலிருந்தே அதன் தன்மையை ஒருவாறு உணர்ந்திருக்கிறேன்.

வாதப்ரதிவாதங்களின் தராதரங்களைச் சீர்தூக்கி விமர்சிப்பது உபயவேதாந்த ப்ரவர்த்தகர்களான மஹான்களுக்கேதகும். இப்படிப்பட்ட விஷயங்களில் பரிசயமுள்ள கள்ளக்குறிச்சி அட்வகேட் ஸ்ரீ. ஆராவமுதுதாதாசாரியார் இது ஸம்பந்தமாக எழுதி வெளியிட்டிருக்கிற வியாஸத்தில் வாத ப்ரதிவாதங்களை ஆங்கிலம் பயின்றவர்களுக்கு அவகாஹமாகும் முறையில் விசதமாக எழுதியுள்ளார். நம் போலியர்கள் அவரவர்கள் மனோபாவத்துக்கு ருசிக்கும் அபிப்ராயங்களைக் கைக்கொள்வது பொருத்த முடையதாகும். எந்த சந்தர்ப்பத்திலும் அளவுக்கு மீறின விவாதங்களுக்குத் தகுதியில்லை. அளவுக்கு மீறின முறையில் ஒருவரை யொருவர் கண்டிக்கவும் தகுதியில்லை.

நிர்ப்பயமாகவும் நிர்தாக்ஷிண்யமாகவும் தத்வார்த்தங்களை விளக்கி நிலை நிறுத்த P. B. A. ஸ்வாமி ஒரு காலும் தயங்குவதில்லை யென்பது யாவருமறிந்த விஷயம். விஷயங்களைப் பரிசீலனை செய்ய ஒவ்வொருவரும் சுதந்திரம் பெற்றிருக்கிறபடியாலே படித்தவர்களிடமும் சிறந்த மேதாவிகளிடமும் இப்படிப்பட்ட சர்ச்சைகள் நிகழ்வது

ஸஹஜமே. ஆனல் விவாதங்கள் ஒழுங்கான முறையில் உயர்ந்தரீதியில் எவர் மனமும் நோகாதபடி விமர்சனம் செய்யப்பட வேண்டுமேயல்லது ஒருவரை யொருவர் தூஷிக்க முற்படுவது தகாது. தக்கபடி பதி லுரைத்துத் தம் வாதங்களை ஸ்தாபிக்க சக்தியற்றவர்கள் தூஷணையில் இறங்க முற்படுவர்களென்பது இயற்கை. நம்மில் பலர் காரப்பங்காடு ஸ்வாமியிடம் ப்ரேமையும் பக்தியுமுடையவர்கள். அந்த ஸ்வாமி, தன் கோஷ்டியினரால் வெளியிடப்பட்ட அறிக்கை P. B. A. ஸ்வாமியின் பக்தர்களுக்கு மனக்கசப்பையுண்டாக்கியுள்ள தென்பதையறிந்ததும் அந்த அறிக்கையை நிராகரித்து, தனக்கும் அவ்வறிக்கைக்கும் எவ்வித சம்பந்தமுமில்லையென்று தெரிவிப்பரென்பதில் யாதொரு சந்தேகமு மில்லை

P. B. A. ஸ்வாமி பலவாண்டுகளாக ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத் திற்காகப் பலவகையில் ஒப்புயர்வற்ற தொண்டுகள் செய்து வருவது நாட்டில் பலருக்கும் நன்கு தெரிந்திருப்பதால் யாரிடமிருந்தும் எவ்விட மிருந்தும் எத்தனை தூஷணை யறிக்கைகள் தோன்றினலும் P. B. A. ஸ்வாமியின் கௌரவத்திற்கும் புகழுக்கும் எவ்விதமான குறையும் ஒரு நாளும் ஏற்படாது. அநாமதேயமான வோர் அறிக்கை என்ன செய்யப் போகிறது.

P. B. A. ஸ்வாமியின் உபந்யாஸங்களைக் கேட்டவர்களும் அந்த ஸ்வாமியின் க்ரந்தங்களை ஸேவித்தவர்களும் பூர்வாசார்ய க்ரந்தங்களில் உண்மையில் எவ்வித முரண்பாடும் கிடையாதென்பது P. B. A. ஸ்வாமி யின் ஸித்தாந்தமென்றும், மேலெழுந்த வாரியில் எங்கேனும் முரண் பாடு கண்டாலும் அவைகளைப் பொருத்தமான முறையில் ஸமந்வயப் படுத்துவது ஸ்வாமியின் இயல்பு என்றும் நன்கு உணர்வர்கள்.

P. B. A. ஸ்வாமியின் கோஷ்டியினர் எதிர் வகுப்பு அறிக்கை விஷயமாய் எவ்விதமான கவலையுங்கொள்ள வேண்டா. அதை லக்ஷ்யத் தில் வைக்காமலிருப்பது நலம். எவ்வித எதிர்ப்பாவது பதிலாவது எழுத வேண்டுவதுமில்லை. மேற்கொண்டு இந்த விவாதத்தில் எவ்வித பிரசாரமும் வேண்டியதுமில்லை. இனி, உலகம் மதிக்கும் உத்தமாதி காரிகள் பிரஸ்தாப விவாதத்தில் ஏதாவது ஈடுபட்டா லீடுபடட்டும். இவ் விவாதத்தை இத்துடன் முடிவு செய்ய P. B. A. ஸ்வாமியை முழுமன துடன் பிரார்த்திக்கிறேன்.

P. B. A. ஸ்வாமியும் காரப்பங்காடு ஸ்வாமியும் ஒரே ஸம்பிரதா யத்தின் அபிவிருத்தியில் அரும்பாடு படுகிறவர்கள். இருவர்களும் மஹான்கள். உத்தமாதிகாரிகள். தம்தம் அபிப்ராயங்களை அவரவர் சித்தாந்தமாகக் கொண்டிருந்தாலும் இவ்வபிப்ராய பேதம் வியாஜமாக ஸௌஜந்ய பங்கத்திற்கு எவ்விதமாகவும் இடம் தராமலிருக்கும்படி பிரார்த்திக்கிறேன்.

சென்னை
1—8—1955

V. ராஜகோபாலாசாரி.

மதுரை ஸத்ஸம்ப்ரதாய ஸபையின் காரியதரிசி

## ஸ்ரீமான் உ. வே. S. ஸுந்தரராஜய்யங்கார்

(வக்கீல், 11, கிருஷ்ணன் ஸன்னிதி வடக்கு மாசி வீதி) அவர்களின் கடிதம்.

---

சில மாதஙகளாய் இரண்டு மஹான்களுக்கு நடந்துவரும் க்ரந்த சர்ச்சை ஒரு அநாமதேய பத்ரிகையினுல் மிகவும் சோசநீயமான நிலைமைக்குக் கொண்டு வரப்பட்டதென்பதை வெகு வருத்தத்துடன் விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீ காஞ்சீ அண்ணுஸ்வாமி ஒருவருடைய திருநாமத்தையும் குறிப்பிடாமலும் ஒருவருடைய க்ரந்தத்திற்குக் கண்டனமெழுதுவதாகக் கூடச் சொல்லாமலும் விஷயசர்ச்சை செய்திருந்தார். அதில் எவ்வித தவறுமில்லை. ஸ்ரீமத் காரப்பங்காடு ஸ்வாமி அதற்கு மறுப்பு எழுதத் தொடங்குகையில் ஸ்ரீ அண்ணுஸ்வாமியின் திருநாமத்தைக் குறிப்பிட்டு அந்த ஸ்வாமிக்கு மறுப்பு எழுதுவதாகவே கண்டிருந்தது. இது தேவையில்லை. அந்த ஸ்வாமியும் அண்ணுஸ்வாமி போலவே விஷய சர்ச்சையோடு நிறுத்தி முடித்திருக்கலாம்.

ஸ்ரீ வைஷ்ணவ வுலகுக்கு அண்ணு ஸ்வாமி உயிர் நிலையாயிருக்கிறுர். காரப்பங்காடு ஸ்வாமியும் அவருக்கு அடுத்தபடியே. ஆகவே ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அன்பர்களாயும் உயிர் நிலையாயுமுள்ள இருமஹான்கள் சண்டையிட்டுக்கொள்வதாக அநாதமதேய ரொருவர் தப்புப் பிரசாரம் செய்வது ஸ்ரீ வைஷ்ணவ வுலகுக்கே கேவலமானது. காரப்பங்காடு ஸ்வாமி பரம ஸாத்விகர். அண்ணு ஸ்வாமியிடத்தில் அபாரமான மதிப்பும் பிரதிபத்தியும் வைத்திருப்பவர். உண்மையில் அண்ணு ஸ்வாமியின் வித்யாபரிச்ரமம் அபாரமானது. மாற்சரியமில்லாத யாரையும் கவர்ச்சி செய்யக்கூடிய தென்பதில் சந்தேகமில்லை, ஆச்சரியமுமில்லை. அண்ணு ஸ்வாமியைப்போன்ற வித்வான் ஸ்ரீ வைஷ்ணவ வுலகத்தில் இப்போது யாருங்கிடையாது. ஸ்ரீ வைஷ்ணவ வுலகுக்கு இந்த ஸ்வாமி புரியும் தொண்டு வாசாமகோசரம். நூறு பேர்கள் சேர்ந்தாலும் செய்ய முடியாத காரியத்தை அண்ணு ஸ்வாமி ஒருவரே ஸாதித்து விடுகிறுர். இதை யெழுதும்போது ஸ்ரீ ராமபிரானுடைய பராக்ரமத்தை வான்மீகிமுனி போற்றியிருப்பதுதான் நினைவுக்கு வருகிறது.

தற்காலம் நடந்துவரும் அந்த ஸ்வாமியின் உத்தரதேச யாத்திரை உண்மையில் திக்விஜயமே யாகும். இந்த யாத்திரையில் ரிஷீகேசத்தில் ஸ்ரீ ஸ்வாமியினுடைய வித்வத்தின் பெருமையையறிந்த ஸ்ரீ சிவானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள் வேதபாரங்கதர் என்கிற விருதை ஸ்வாமிக்கு

அளித்ததாகப் பத்ரிகைகளில் வாசிக்கிறோம். நம் ஸமூஹத்திற்கே, முக்கியமாக மணவாள மாமுனிகளின் ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கு அண்ணா ஸ்வாமியால் பெருமையும் பெருமதிப்பும் தென்தேசத்திலும் வடதேசத்திலும் அபரிமிதமாக ஏற்பட்டு வருகிறது. ஆகையால் ஸ்ரீ ஸ்வாமியினுடைய கௌரவத்திற்கும் மதிப்புக்கும் ஹானியை விளைக்க யார் நினைத்தாலும் அது உசிதமானதன்று. ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு இது நெஞ்சாலும் நினைக்கத் தக்கதன்று. காரப்பங்காடு ஸ்வாமியோ அவருடைய கோஷ்டியாரோ இதில் பிரவேசிக்கத் தகவேதகாது.

மஹாயசஸ்வியான ஸ்ரீமத் காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமியிடத்தில் அண்ணா ஸ்வாமிக்கு விசேஷப்ரதிபத்தியுண்டு. அதிலிருந்தே அவருடைய தௌஹித்ரரும் புத்ரஸ்தாநீயருமான (வர்த்தமாந) காரப்பங்காடு ஸ்வாமியிடத்திலும் அன்பு ஏற்பட்டு விசேஷித்துக் கொண்டு வந்தது. இந்த ஸ்வாமிக்கும் அண்ணா ஸ்வாமியிடத்தில் மிகுந்த அன்பும் மதிப்பும் பிரதிபத்தியும் இருப்பது அடியேனுக்கு நன்கு தெரியும். இவ்விருவர்க்கும் பரஸ்பரம் ஸௌஹார்தம் விலக்ஷணமானதே. யார் கண்ணெச்சில்பட்டதோ அறியோம். உலகம் வேறாகப் பேச அவகாசமேற்பட்டு விட்டது. இது மிகவும் வருந்தத்தக்க விஷயம்.

காரப்பங்காடு ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டியிலிருந்து வெளி வந்ததாகக் காணும் ஒரு அநாமதேய துண்டுபிரசுரம் அடியேனுக்கும் அனுப்பப்பட்டுக் கிடைத்தது. வாசித்துப் பார்த்தேன். பரம ஸாத்விகரான காரப்பங்காடு ஸ்வாமியால் அது எப்படி அனுமதிக்கப்பட்டதென்று அடியேனுக்கு மிகுந்த விஸ்மயமுண்டாயிற்று. உண்மையில் ஸ்வாமியால் அனுமதிக்கப்பட்டதல்லவென்றும், சிலருடைய சூழ்ச்சியினால் ஸ்வாமிக்கும் தெரியாமலே பிரசுரம் செய்யப்பட்டிருக்குமென்றும் என்போன்றவர்கள் நினைக்கக் கூடியது இப்படி பிரசுரமாயிருக்கிறதென்று தெரிந்த பிறகு காரப்பங்காடு ஸ்வாமி அதை அவசியம் மறுத்திருக்கவேண்டும். ஆமோதிக்கவும் முடியாமல் மறுக்கவும் முடியாமல் ஏதோ சங்கடமான நிலைமை ஏற்பட்டுவிட்டது போலும்.

மதுரையில் நம்முடைய ஸத்ஸம்ப்ரதாய ஸபையின் வார்ஷிகோத்ஸவங்களுக்கு இவ்விரண்டு ஸ்வாமிகளும் பரமக்ருபையோடு எழுந்தருள்வதுண்டு. இருவரும் பரஸ்பரம் கொண்டாடிப் பேசுமழகை ஸதஸ்யர்கள் கண்டு பரமானந்தமடைந்திருக்கிறார்கள். அண்ணா ஸ்வாமியின் நாநாவித வித்யாபரிச்ரமங்களைக்கண்டு காரப்பங்காடு ஸ்வாமி வியப்படையாதவரல்லர். ப்ரக்ருத விவாதத்தில் அண்ணா ஸ்வாமியின் வாதங்களை வித்வான்கள் மெச்சுகின்றார்களென்பதை அடியேன் அறிந்திருக்கின்றேன். காரப்பங்காடு ஸ்வாமி திருவுள்ளத்திலும் இது பட்டிருக்குமென்றே அடியேனுடைய நம்பிக்கை. அடியேனுக்கு

ஸம்பிரதாய விஷயமான ஞானம் மிகவும் குறைவு. ஆகவே விஷய சர்ச்சையைப்பற்றி யெழுத சக்தியற்றவன். பிறருடைய அபிப்ராயங்களை அநுவதிக்கவும் அடியேன் அநர்ஹனே. இவ்விஷயத்தில் க்ஷமையை வேண்டுகிறேன். விஷய சர்ச்சையை கோபதாபமில்லாமல் நேர்மை யான முறையில் நடத்தினால் உலகுக்கு விசேஷபலன் கிடைக்கும். அபூர்வமான சாஸ்த்ரார்த்தங்கள் தெரியவரும். அண்ணா ஸ்வாமியின் ஒவ்வொரு ஸஞ்சிகையிலும் அபூர்வமான அர்த்தங்களை உலகம் அநுப விக்கப் பெற்றுவருகிறது.

ப்ரக்ருத வாதப்ரதிவாத நூல்களையும் சுவடிகளையும் ஆரம்பம் முதல் அடியேன் தவறாமல் படித்து வருகிறேன். இதில் அடியேன் தலையிடத்தகாதென்று வாளாவிருந்தேன். அது தவறு என்று உணர்ந்து இருஸ்வாமிகளுக்கும் தனித்தனி விண்ணப்பங்களெழுதி யிருக்கிறேன். இருவரும் அடியேனை அந்யதாவாக நினைக்கக் கூடியவர் களல்லர். அடியேனுடைய பூர்வ ஜன்ம ஸுக்ருதவிசேஷத்தால் இவ் விரு ஸ்வாமிகளும் அடியேனிடத்து ஒரு விசேஷமான அன்பு வைத் திருக்கிறார்கள். அதனால் மிகுந்த தைர்யத்துடன் பிரார்த்திக்கிறேன். ஸ்ரீ வைஷ்ணவ வுலகில் திங்களுமாதித்தியனும் ஏக காலத்திலெழுந்தாற் போல் விளங்கும் இவ்விரு ஸ்வாமிகளும் மேன்மேலும் அதிசயிக்கும் ஸௌஹார்தத்துடனே நீடூழி விளங்கி உலகை வாழ்விக்க வேணு மென்று.

சாஸ்த்ரார்த்தங்களை வெளியிடுவதில் ஒருவர்க்கும் வைராக்ய முண்டாக வேண்டாம். தாம் தாம் கண்ட அர்த்த விசேஷங்களை "சார்ங்க முதைத்த சரமழை போல்" என்கிற அடைவில் அல்லாமல் "வாழ வுலகினில் பெய்திடாய்" என்ற அடைவிலே வர்ஷித்துக் கொண் டிருக்க வேணுமென்பதே பிரார்த்தனை.

தாஸன், S. சுந்தரராஜன்,
மதுரை.

மதுரை ஸத்யஸம்ப்ரதாயஸபையின் நிரந்தர அக்ராஸனரான
ஸ்ரீமான் உவே. ராவ்பஹதூர் மநீஷிமான்ய
R. நரஸிம்ஹய்யங்கார் ஸ்வாமியின்

# திருவருட்பொலிவு.

"த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே" என்கிற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியிலிருந்து இவ்வளவு விவாதம் வளர்ந்தது வெகு ஆச்சரியமாக விருக்கிறது. த்ரௌபதிக்குப் புடவை சுரந்த விஷயத்திலே வாச்யனை எம்பெருமானுக்கு ஸம்பந்தமேயில்லாமல் வாசகமான திருநாமத்துக்கு மட்டுமே ஸம்பந்தமுள்ள தென்பதை ஸ்தாபிக்க முடியுமாவென்று அவரவர்கள் சிறிது ஆலோசிக்கவேணும். திவ்ய தேசங்களிலே பகவானுக்கு அர்ச்சனைகள் செய்யும்போது "த்ரௌபதீவஸ்த்ர வர்த்த நாய நம:" என்று கோஷிப்பதைக் கேட்டு வருகிறோம். ஐயங்கார் திருவரங்கக் கலம்பகத்தில் "தானையைவர் கொடிக்களித்தவர் தானை கொண்ட தளிக்கிலார்" என்கிறார். ஐவர் கொடிக்கு பஞ்சபாண்டவர்களின் மனைவியான பாஞ்சாலிக்கு, தானை யளித்தவர் வஸ்த்ரத்தை யளித்தவர் என்று பொருள். இவற்றால் கண்ண பிரான்தான் த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தவனென்பது ஸ்பஷ்டமாகிறது. விரோதாபாஸ மென்கிற அலங்காரத்தில் வைத்துப் பேசி எம்பெருமானை யநுபவிக்கின்றவர்களும் "வஸ்த்ர ப்ரதாதாபிச வஸ்த்ர ஹர்த்தா" என்கிறார்கள். அதாவது, கண்ணன் வஸ்த்ரத்தைக் கொடுப்பவனுமிருக்கச்சேயும் அதையபஹரிப்பவனுயு மிருக்கிறானென்றபடி. கோபிகளிடத்தில் வஸ்த்ராபஹாரம் பண்ணினான்; த்ரௌபதியிடத்தில் வஸ்த்ர ப்ரதானம் பண்ணினானென்கை. இது "ஆனைகாத்தோரானை கொன்று" என்று திருமழிசைப்பிரானநுபவிக்கிற க்ரமம் போன்றது. இதைப்பற்றி அதிகமாக எழுதவேணுமோ? த்ரௌபதிக்குப் புடவை சுரந்தவன் கண்ணனே யென்றால் இதை யாரும் ஆக்ஷேபிக்க மாட்டார்கள்.

தத்துவம் இப்படியிருக்க, த்ரௌபதிக்கு ஆபத்தைப் போக்கினவன் பகவானல்லன், திருநாமந்தான் என்று ஒரு மஹாசார்யர் அருளிச்செய்தால் இதை ரஸிகர்கள் ரஸகனமாக அநுபவித்துப் போக வேணுமே யல்லது விரோதத்தில் கொண்டுவிட்டு விவாதத்தை வளர்த்திக்கொண்டு போவது யுக்தமாக அடியேனுடைய சிற்றறிவில் தோன்றவில்லை. முமுக்ஷுப்படியில் அதே ப்ரகரணத்தில் "ப்ரபத்தியிலே யிழிந்தவர்களுக்கு ஸ்வரூபஜ்ஞானத்தைப் பிறப்பித்துக் காலக்ஷேபத்

துக்கும் போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும்" என்கிற சூர்ணையையும் ஸேவிக்கிறோம். "வாசகத்திற் காட்டில் வாச்யத்திலே ஊன்று கைக் கடி" என்கிற சூர்ணையையும் ஸேவிக்கிறோம். இவற்றால் நமக்கே நல்ல தெளிவு பிறப்பதாக எண்ணுகிறேன்.

வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கு இரண்டு திருக்குமாரர்கள் திருவவ தரித்து உலகுக்கு அபரிமிதமான உபகாரங்களைச் செய்து வைத்தார் கள். இவ்விருவரும் பெரும்பாலும் ஈடு முப்பத்தாறாயிரப்படியையே கொண்டு அர்த்தங்களை யருளிச் செய்தவர்களாகையாலே பரஸ்பர விருத்தமாகவோ ஸ்வோக்தி விருத்தமாகவோ அருளிச்செய்ய ப்ரஸக் தியே கிடையாது. அப்படி சங்கிக்கவும் ப்ரமேயமில்லை. பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியார் ஆசார்ய ஹ்ருதயத்திலே "வத் ஸலையான மாதா பிள்ளை பேகணியாமல் மண் தின்னவிட்டு ப்ரத் யௌஷதமிடுமா போலே" என்றருளிச் செய்தார். இவ்விடத்திற்கு மணவாளமாமுனிகளின் வியாக்கியானம் — 'வாத்ஸல்யயுக்தையான பெற்ற தாயானவள் மண்ணையாசைப்பட்ட பிள்ளை பேகணியாமல் [—முகம் கன்றாமல்] முந்துற மண்ணைத் தின்னவிட்டு பின்னை அதுக்கு மாற்று மருந்திடுமாபோலே" என்று. இதே விஷயத்தை திருத்தமைய னான பிள்ளை லோகாசார்யர் தத்வத்ரயத்தில் அருளிச்செய்யும் போது "மண் தின்ற ப்ரஜையை நாக்கிலே குறியிட்டு அஞ்சப்பண்ணும் மாதாவைப் போலே" என்றார். இவ்விடத்திற்கு மணவாள மாமுனி களின் வியாக்கியானம்—"தனக்கு ரோககரமான மண்ணை விரும்பித் தின்ற ப்ரஜையை மேலே தின்னுதபடி நாக்கிலே குறியிட்டு மண் தின்ன பயப்படும்படி பண்ணும் ஹிதபரையான மாதாவைப் போலே" என்று. நாக்கிலே குறியிட்டு அஞ்சப் பண்ணுகையாவது கரண்டியைக் காய்ச்சி நாக்கிலே சூடு போடுகை தானே. இதே தத்வத்ரயத்தில் ஐந்து சூர்ணை களுக்கு முன்னே "அவினீதனை புத்ரனைப் பிதா விலங்கிட்டு வைக்கு மாபோலே" என்றார். இந்த த்ருஷ்டாந்தம் காட்டினது பொருத்தம். ஹிதபரனை பிதா இப்படிப்பட்ட தண்டனையைச் செய்வது ஸஹஜம். இந்த தண்டனையைக் காட்டிலும் மிகவுங் கொடிதான தண்டனையை [நாக்கிலே சூடு போடுகையை] ப்ரியபரையான மாதா செய்வதாகச் சொல்லியிருப்பது எப்படி? "வத்ஸலையான மாதா பிள்ளை பேகணி யாமல் மண் தின்னவிட்டு ப்ரத்யௌஷதமிடுமாபோலே" என்கிற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீ ஸூக்திக்கு இது நேர்விருத்தமாக இல்லையா? என்று ஒருவர் சங்கித்து விட்டால் இதற்கு என்ன பரிஹாரம்.

உலகத்தில் எல்லா மாதாக்களின் ஸ்வபாவமும் ஒரேவிதமாக இருப்பதில்லை. பிள்ளை முகம் கன்றாமல் மண் தின்னவிட்டுப் பிறகு மாற்று மருந்திடுகிற தாயார்களுமுண்டு. மண்ணை விரும்பித் தின்ற ப்ரஜையை மேன்மேலும் தின்னுதபடி நாக்கிலே குறியிடுகிற தாயார்களுமுண்டு.

ஒரு தாயாரே ஒரு ஸமயத்தில் மண் தின்ன விடுவதும் மற்ருெரு ஸமயத்தில் நாக்கிலே குறியிட்டஞ்சப் பண்ணுவது முண்டு. ஒரு ஸம்பவத்தை ஒரு ஆசார்யர் அருளிச் செய்தார். மற்ருெரு ஸம்பவத்தை மற்ருெரு ஆசார்யர் அருளிச்செய்தார் என்று கொள்வது தவிர வேறுண்டோ? மாதாவுக்கு ப்ரியபரத்வமே இயற்கையாயிருந்தாலும் கதாசித் ஹிதபரத்வமும் கூடுவதுண்டு. இதை மணவாளமாமுனிகள் வெகு சாதுர்யமாக எடுத்துக்காட்டி விரோத சங்கையும் பண்ணுமல் பரிஹாரமும் பண்ணுமல் விட்டிருக்கிருர். இப்படி எத்தனையோ விஷயங்களை யெடுத்துக் காட்டலாம். எம்பெருமானுக்குப் பெருமை சொல்ல வேண்டுமிடத்தில் எம்பெருமானே வஸ்த்ரவ்ருத்தி பண்ணிக் கொடுத்ததாகச் சொல்லலாம். ப்ரபத்திக்குப் பெருமை சொல்லவேண்டுமிடத்தில் ப்ரபத்தியே புடவை சுரந்த தென்னலாம். திருநாமத்துக்கு ப்ரபாவம் சொல்ல வேண்டும்போது திருநாமமே புடவை சுரந்ததாகச் சொல்லலாம். இவற்றில் ஒரு விரோதமும் தோன்றுவதற்கு இடமில்லையென்று நினைக்கிறேன். ஏதோ இந்த வியாஜத்தினுலும் அண்ணு ஸ்வாமியின் அமுதமொழி மாலைகளை யநுபவிக்க உலகம் பாக்கியம் செய்தது என்றிவ்வளவுதான் அடியேனுடைய மனத்தில் பட்டது.

ஒரு ஸமயம் சரமச்லோகார்த்தத்தை ஊன்றிச் சிந்தனை செய்யும் போது முமுக்ஷுப்படியில் (மோக்ஷயிஷ்யாமி) என்ற விடத்தின் விவரணத்தில் "னிச்சாலே நானும் வேண்டா, நீயும் வேண்டா, அவை தன்னடையே விட்டுப் போங்கா ணென்கிருன்" என்றருளிச் செய்திருப்பதை ஆழ்ந்து நோக்க நேர்ந்தது. அந்த ப்ரகரணத்திலேயே ஆரம்பத்தில் "பூர்வார்த்தத்தாலே அதிகாரி க்ருத்யத்தை யருளிச் செய்கிருன்; உத்தரார்த்தத்தாலே உபாயக்ருத்யத்தை யருளிச் செய்கிருன்" என்று சொல்லப்பட்டது. சேதநன்பண்ண வேண்டிய காரியத்தையும் அவனுக்கு ஈச்வரன் செய்யும் காரியத்தையும் இந்த ச்லோகத்தில் சொல்லுகிறது என்றபடி. முன்னே இப்படிச் சொல்லிவிட்டு மேலே நானும் வேண்டா நீயம் வேண்டாவென்று அந்த க்ருஷ்ண பகவான் தானே சொல்லுவதாக வைப்பது எப்படி பொருந்தும்? அதிகாரி க்ருத்யமான உபாய வரணமும், ஸித்தோபாய பூதனை எம்பெருமானுடைய க்ருத்யமான ஸர்வபாப மோக்ஷணமும் பூர்வார்த்த உத்தரார்த்தங்களாலே சொல்லப் படுவதாகச் சொல்லிவைத்து, நானும் வேண்டா நீயும் வேண்டா வென்கிருனென்ருல் இதை எப்படிப் பொருந்த விடுவது? என்று என்னைப் போன்ற மந்தமதிகள் சங்கிக்க நேருமன்ருே. இப்படிப்பட்ட விஷயங்களிலே மஹாமதிகள் கைவைத்து எழுதினுல் லோகோபகாரமாகும். நாமும் ஆனந்தமாக அநுபவிக்கலாம்.

முடிவில் ஒரே வார்த்தை. பகவான் கடல் கடைந்து அளித்த அமுதத்தை அமரர்கள் அருந்துவதாகச் சொல்லுகிருர்கள். அதன் உண்

மையை நானறியேன். நம் அண்ணு ஸ்வாமி உபய வேதக்கடல்களையும் கடைந்து கருணையோடு அனைவர்க்கும் நாள்தோறும் திங்கள் தோறும் ஆண்டுதோறும் ப்ரஸாதிக்கின்ற அமுதத்தை உலகமெல்லாம் அநுபவித்துக்களிக்கும் பாக்கியம் பெற்றிருக்கிறது. இந்த பாக்கியத்திற்குப் பல்லாண்டு பாடுவதே அடியேனுடைய நித்ய கைங்கர்யம்.

**R. நரஸிம்ஹன்.**

*மதுரை.*

*சிறு குறிப்பு :—இந்த விவாதத்தில் தலையிடுவதற்கு அடியேனுக்கு அர்ஹதையில்லை யாயினும் இப்படியொரு விதி வாய்த்தது. கலங்கியிருக்கிற வுலகுக்கு நாமறிந்த விஷயதத்துவத்தை யுணர்த்துவோமென்று ஆசைகொண்டு ஆங்கிலத்தில் ஒரு வியாஸமெழுதி வெளியிட்டேன். காக்கைவாயிலும் கட்டுரை கொள்வர்" என்று பெரியாழ்வாரருளிச் செய்த ரீதியில் அடியேனுடைய புன்மொழிகளைப் பொன் மொழிகளாக மெச்சிப் பல மஹான்கள் ஸ்ரீமுகங்களும் வியாஸங்களும் அநுக்ரஹித்து வருகிறார்கள். எல்லாவற்றையும் வெளியிட முடியாமல் சிலவற்றையே வெளியிட்டு இவ்வளவோடு விச்ராந்தனுகிறேன்.*

*தாஸன்,* **T. A. தாதாசாரி.**

# முன்னுரை

ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியொன்றுக்கும் முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தி யொன்றுக்கும் பரஸ்பர விரோதமிருப்பதாக வொரு வாதமும், விரோதம் கிடையவே கிடையாதென்று மற்றொரு வாதமும் ஆக இப்படிப்பட்ட விவாதம் இரு மஹான்களுக்குள்ளே நிகழ்ந்துவருவது நான்கு மாதங்களாக. இந்த விவாதம் முதல் முதலாக யாரால் ஏற்பட்டது? எப்போது ஏற்பட்டது? என்பது யாவர்க்கும் தெரிந்ததே. ஸ்ரீமத் காரப்பங்காடு ஸ்வாமிகளால் 13 வருஷங்களுக்கு முன்பு எழுதி அச்சிடப்பட்டிருந்த "விரோதபரிஹாரம்" என்கிற வியாஸம் மறுபடியும் நான்கு மாதங்களுக்கு முன்பு பக்தன் என்கிற பத்ரிகையில் அப்படியே மறுபதிப்பாகி வெளிவந்தது. அதற்குக் கண்டனமென்று யாரும் யாதொரு வியாஸமும் எழுதவில்லை. அந்த விரோதபரிஹாரமென்கிற வியாஸத்திற்கு ஸ்ரீமத் காஞ்சீபுரம் ஸ்வாமிகள் கண்டனமெழுதி வெளியிட்டதாகச் சிலர் நினைப்பது சிறிதும் ஆதாரமற்றது.

ஸ்ரீகாரப்பங்காடு ஸ்வாமிகள் எப்படி ஒருவரையும் குறிப்பிடாமல் தம்முடைய அபிப்ராயத்தை மட்டும் வெளியிட்டாரோ, அப்படியே காஞ்சீபுரம் ஸ்வாமிகளும் ஒருவரையும் குறிப்பிடாமல் ஸ்ரீஸூக்திகளின் ஐககண்டியம், த்ரௌபதியின் ஸம்ரக்ஷணம் என்கிற இரண்டு வியாஸங்களை யெழுதி சென்ற ஜய௵ பங்குனி மாதத்தில் தம்முடைய ஸ்ரீராமாநுஜன் பத்ரிகையில் வெளியிட்டிருந்தார். அதில் தம்மிடம் வந்து கேட்டவர்களுக்குத் தாம் உரைத்த பதிலை வெளியிடுவதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறதேயொழிய, ஒருவருடைய வியாஸத்திற்குக் கண்டனமென்பதாகச் சிறிதும் காட்டப்பட்டிருக்கவில்லை. ஸ்ரீராமாநுஜன் நெ. 74. அநேகமாய் ஒவ்வொருவருடைய க்ருஹத்திலுமிருக்குமே. அதை யெடுத்துப்பார்த்தால் உண்மை விளங்கும்.

காஞ்சீபுரம் ஸ்வாமியின் ஷடி இரண்டு வியாஸங்களிலுமுள்ள விஷயங்களைக் கண்டனம் செய்து மறுப்பு எழுதவேணுமென்று ஒருவர்க்குத் தோன்றினால் அவர் செய்யவேண்டியதென்ன? அவரும் காஞ்சீபுரம் ஸ்வாமியைப்போலவே பெயரைக் குறிப்பிடாமல் தமக்கு அபிமதமான விஷயங்களைமட்டும் எழுதி லோகாபிராமமான நடையில் வெளியிடுவது நியாயமாகும். ஸ்ரீமத் காரப்பங்காடு ஸ்வாமிகள் அந்த நடையைக் கைப்பற்றாமல், அடுத்த பக்தன் பத்ரிகையில் "காஞ்சீபுரம் மஹாவித்வான் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகள் என்னுடைய வியாஸத்தைக் கண்டனம் செய்து வியாஸங்கள் வெளியிட்டிருக்கிறார்; அவை யுக்தமல்லவென்று நான் நிரூபணம் செய்கிறேன்" என்று பீடிகையிட்டு ஒரு கட்டுரை [ஆராய்ச்சி யென்பதை] வெளியிட்டார். அது வெளிவந்த பிறகுங்கூட காஞ்சீபுரம் ஸ்வாமிகள் அடுத்த ஸ்ரீராமாநுஜனில் (No. 76ல்) தாம் எழுதி வெளியிட்ட வியாஸம் ஒருவர்க்கும் கண்டனமாக எழுதப்பட்டதல்ல

வென்றும் ஒருவரையு முத்தேசித்து எழுதப்பட்டதல்லவென்றும் ஸ்பஷ்டமாக எழுதி வெளியிட்டிருக்கிறார். இதையும் அனைவரும் வாசித்துப் பார்க்கலாம்.

அதன் பிறகு மறுபடியும் காரப்பங்காடு ஸ்வாமிகள் அடுத்த பக்தனில் காஞ்சீபுரம் ஸ்வாமிகளின் திருநாமத்தைக் காட்டி அவர் தம்முடைய வியாஸங்களைக் கண்டனம் செய்துவிட்டதாகத் தெரிவித்து அதற்குத் தாம் மறுப்பு எழுதுவதாக (எதிர் மொழிகள்) என்கிற வியாஸத்தை வெளியிட்டார். அதற்குப் பிறகுங்கூட காஞ்சீபுரம் ஸ்வாமிகள் ஸ்ரீ ராமாநுஜன் 77, 78ல் தாம் விரிவாக எழுதி வெளியிட்ட வியாஸங்களில் ஸ்ரீ காரப்பங்காடு ஸ்வாமியின் திருநாமத்தை அடியோடு காட்டாமலே விஷயங்களை மாத்திரம் விளக்கியிருக்கிறார்.

ஆக, இந்த விவாதம் ஏற்பட்டது முதல் காரப்பங்காடு ஸ்வாமிகள் காஞ்சீபுரம் ஸ்வாமிகளின் திருநாமத்தை இருமுறை வெளியிட்டு மறுப்பெழுதினரே தவிர, காஞ்சீபுரம் ஸ்வாமிகள் இந்தக்ஷணம் வரையில் ஒரு வியாஸத்திலும் காரப்பங்காடு ஸ்வாமிகளின் திருநாமத்தை ஸ்பர்சிக்கவேயில்லை யென்பது ஸத்தியம். விஷயங்களின் நிரூபணப் போக்கை கவனித்தால் காரப்பங்காடு ஸ்வாமிகளின் வியாஸங்களுக்கும் கண்டனமாகப் புலப்படும் என்பது தனிப்பட்ட விஷயம். விஷயத்தில் விவாதமுண்டென்பதை யாரும் மறைக்க முடியாது.

வஸ்துஸ்திதி இங்ஙனேயிருக்க, காரப்பங்காடு ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டியின் சார்பாக வெளியிடப்பட்டதென்று ஒரு அநாமதேயக் காகிதம் நிந்தாமயமாக வெளிவந்திருப்பது எந்த வழிப்போக்கருடைய செயலென்று தெரியவில்லை. இதைப்பற்றி, அடியேனுடைய பரமஸஹ்ருத்தான ஸ்ரீமான். பண்டித. சௌரிராஜய்யங்கார் எழுதிய ஒரு வியாஸத்தைப் பின்னேசேர்த்து வெளியிடுகிறேன். ஸஹ்ருதயர்கள் யாவரும் அதனால் அனேக வுண்மைகளைத் தெரிந்துகொள்வர்கள். அந்த அநாமதேயக் கந்தையினால் காஞ்சீஸ்வாமிக்கு அபகீர்த்தி லேசமும் நேராது. ஆனால் காரப்பங்காடு ஸ்வாமிக்கே அதனால் அபக்க்யாதி விளைந்திருக்கிறது. "என்னுடைய காலக்ஷேப கோஷ்டிக்கும் அந்த அநாமதேயக் கந்தைக்கும் யாதொரு ஸம்பந்தமும் கிடையாது" என்று காரப்பங்காடு ஸ்வாமி வெளியிடுவதே நலம்.

இந்த விவாதத்தில் காஞ்சீஸ்வாமியின் வாதங்கள் யாவும் தனிப்புத்தகமாக விளங்குவது நன்றென்று கருதி இப்புத்தகம் வெளியிடப்படுகிறது. .... ... ... ... ... *

**T. ஆராவமுது தாதாசாரியர்,**
அட்வகேட், கள்ளக்குறிச்சி.

---

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்



பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்

# ஜகதாசார்ய ஸூக்திஸுதாநிதி

—ஸ்ரீகாஞ்சீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசார்ய ஸ்வாமி த்ரௌபதீ சரணாகதி
விஷயமாக அருளிச்செய்த ஸ்ரீஸூக்தி
களின் ஸங்க்ரஹம்—

# —அறுபத்து நான்கு ஸ்ரீஸூக்திமாலை—

## முதல்தரங்கம்—ஸ்ரீஸூக்திகளின் ஜககண்டயம்

1. *ஸர்வஜ்ஞ லோககுருநிர்மிதம் ஆர்யபோக்யம் வந்தே ஸதா வசநபூஷண திவ்யசாஸ்த்ரம்* என்று திவ்யசாஸ்த்ரமாகப் போற்றப்பட்ட ஸ்ரீவசநபூஷணத்தில்—'ப்ரபத்திக்கு தேசநியமமும் காலநியமமும் ப்ரகாரநியமமும் அதிகாரி நியமமும் பலநியமுமில்லை" என்கிற சூர்ணையினால் ப்ரபத்திக்கு தேச, கால, ப்ரகார, அதிகாரி, பலன்களின் நியமமில்லாமையை ப்ரதிஜ்ஞை பண்ணி, இவற்றுள் ப்ரகார நியதியில்லாமையை உபபாதிக்கிறவிடத்திலே "த்ரௌபதி ஸ்நாதையாயன்றே ப்ரபத்தி பண்ணிற்று" என்றருளிச்செய்தும், அதற்கு மேலே அதிகாரி நியமமில்லாமையை உபபாதிக்கிற விடத்திலும் "த்ரௌபதி சரணம் புகுருகையாலே" என்றருளிச்செய்தும், அதற்குமேலே பல நியமமில்லாமையை உபபாதிக்கிற விடத்திலும் 'த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்" என்றருளிச்செய்தும் போருகையாலே த்ரௌபதியானவள் ரஜஸ்வலையாயிருக்கிற காலத்திலே எம்பெருமானை நோக்கி ப்ரபத்தி பண்ணினாளென்றும், அந்த ப்ரபத்திக்குப் பலனாகப் பெறப்பட்டது வஸ்த்ரமென்றும் ஸ்பஷ்டமாகத் தெரியவருகிறது.

2. இங்ஙனே யருளிச்செய்த பிள்ளை லோகாசார்யர்தாமே முமுக்ஷுப்படியில் "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே" என்றருளிச்செய்திருக்கக் காண்கிறோம். இதனால் த்ரௌபதிக்கு விளைந்த வஸ்த்ரவ்ருத்தியானது அவள் திருநாமம் சொன்னதற்குப் பலன் என்றதாகத் தெரியவருகிறது. இவ்விரண்டு ஸ்ரீஸூக்திகளும் பரஸ்பர விருத்தமான பொருளைத் தெரிவிப்பனபோல் காண்கிறது. 'வஸ்த்ரம் ப்ரபத்திக்குப் பலன்' என்பதாக ஸ்ரீவசநபூஷணாபிப்ராயம். அது திருநாம ஸங்கீர்த்தனத்திற்குப் பலன் என்பதாக முமுக்ஷுப் படியின் அபிப்ராயம். ப்ரபத்தியும் திருநாமஸங்கீர்த்தனமும் வெவ்வேறு காரியங்களேயொழிய ஒரேகாரியமென்னவொண்ணாது. ஆகவே, ஒரு க்ரந்தத்தில் வஸ்த்ரவ்ருத்தியை ப்ரபத்தியின் பலனாகச் சொல்லுவதும், மற்றொரு க்ரந்தத்தில் அதைத் திருநாமஸங்கீர்த்தநத்தின் பலனாகச் சொல்லுவதும் விருத்தபாஷணமாகுமன்றோ. இந்த விரோதத்தை எங்ஙனம் பரிஹரிப்பது? என்று சில பக்தர்கள் தத்வஜிஜ்ஞாஸையோடு கேட்டார்கள். பெரியார்களிடம் கேட்டிருந்த ஸமாதானத்தை அவர்களுக்கு உரைத்தோம்; அதையே இங்கு விவரிக்கிறோம்.

3. இங்கே முக்கியமாக விசாரிக்கவேண்டிய விஷயம் ஒன்றே. அதாவது. மிக்க பெருஞ்சபை நடுவே த்ரௌபதியானவள் துச்சாஸநனால் பரிபவிக்கப்படுகிறபோது அந்த பரிபவ நிவ்ருத்தியை யுத்தேசித்துச் செய்தகாரியம் ப்ரபத்தியா? அல்லது திருநாமஸங்கீர்த்தநமா? என்பதே. ஒரு க்ரந்தத்தில் ப்ரபத்தி செய்ததாகச் சொல்லி, மற்றொரு க்ரந்தத்தில் திருநாமஸங்கீர்த்தனம் செய்ததாகச் சொல்லியிருந்தால் அதுதான் பரஸ்பர விருத்தமென்று சங்கிக்கக்கூடியதாகும். த்ரௌபதிசெய்த காரியம் ப்ரபத்திதானென்று ஸ்ரீவசநபூஷணத்தினால் நிஸ்ஸந்தேஹமாகத் தேறியிருக்கிறது. "ரக்ஷ மாம் சரணாகதாம்" என்ற த்ரௌபதீ வசனத்தாலும் இது தேறியிருக்கிறது. முமுக்ஷுப்படியில் 'திரௌபதி ப்ரபத்தி பண்ணவில்லை, திருநாமஸங்கீர்த்தனந்தான் பண்ணினாள்' என்று அருளிச் செய்யப்பட்டிருக்கிறதாவென்று பார்க்கவேணும். அப்படி வசநவ்யக்தி யிருக்குமாகில் அப்போது விரோத சங்கைக்கு இடமுண்டாகியே தீரும். ஸ்ரீவசநபூஷணத்தில் ஸாதித்த ப்ரபத்த்யநுஷ்டானத்தை இல்லைசெய்யும் ஸ்ரீஸூக்தியானது முமுக்ஷுப்படியில் ஓரிடத்திலும் காணப்படவில்லை.

4. "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே" என்ற விடத்திற்கு வியாக்கியான மருளிச் செய்யாநின்ற மணவாள மாமுனிகள் "* ரக்ஷ மாம் சரணாகதாம் * என்று சரணம்புகுந்த த்ரௌபதிக்கு" என்றருளிச்செய்திருப்பதை உற்று நோக்கவேணும். அநபேக்ஷிதமாக ஓரக்ஷரமும் எழுதியருளத் திருவுள்ளம் பற்றாதவரான மாமுனிகள் "சரணம் புகுந்த த்ரௌபதிக்கு" என்றெழுதியருளினதானது, அக்காலத்திலேயே சில அல்பச்ருதர்கள் ஸ்ரீவசநபூஷண

ஸூக்திக்கும் முமுக்ஷுப்படி ஸூக்திக்கும் பரஸ்பர விரோத சங்கை செய்துகொண்டிருக்க, அது ஸாதராம் அஸ்தாநே என்று காட்டியருள் வதற்காகவே யென்று பெரியார் பகர்வர். [இதைப்பற்றி மேலே உப பாதிக்கப்படும்.]

5. த்ரௌபதி தன்னுடைய ஆபந்நிவாரணார்த்தமாகச் செய்தது சரணாகதியே, இதில் விப்ரதிபத்தியில்லை. உபய க்ரந்தங்களும் இதில் ஏககண்டமே. இனி, வஸ்த்ரவ்ருத்தியை சரணாகதியின் பலனாக ஒரு க்ரந்தத்திலும், நாமஸங்கீர்த்தனத்தின் பலனாக மற்றொரு க்ரந்தத்திலும் அருளிச் செய்திருப்பது விருத்தந்தானே என்கிற கேள்வி மிகவும் பல்பஜமானது. ஏனென்னில், ஊன்றிக்கேண்மின். ப்ரபத்திசரீரத்திலே நாமஸங்கீர்த்தநமும் ஓர் உறுப்பாயிருக்கும் முமுக்ஷுப்படி த்வயப்ர கரணத்தில் "ப்ரபத்யே—பற்றுகிறேன்" என்றருளிச்செய்த வனந்தரம் "வாசிகமாகவும் காயிகமாகவும் பற்றினாலும் பேற்றுக்கு அழிவில்லை, * ஜ்ஞாநாந் மோக்ஷமாகையாலே மாநஸமாகக் கடவது" என்றருளிச் செய்து, அடுத்த சூர்ணையிலே "இம்மூன்றும் வேணுமென்கிற நிர்ப்பந்த மில்லை" என்ற விடத்து வியாக்யானத்திலே பரந்தபடி ஸ்ரீஸூக்தியை யுதாஹரித்து அதிகாரி பூர்த்திக்குக் கரணத்ரயமும் அபேக்ஷிதமா யிருக்குமென்று மணவாளமாமுனிகள் நிகமித்தருளியுள்ளார். "அய மேவ உபாயபூதோ மம" என்று மனத்தினால் சிந்தித்து "ஸர்வரக்ஷக! அசரண்யசரண்ய! ஸ்ரீமந்நாராயண! த்வமேவ உபாயபூதோ மே பவ" என்று வாக்கினாலும் ப்ரார்த்தித்து, தாளுந்தடக்கையுங்கூப்பிப் பணிதல் கரணத்ரயத்தாலுமான சரணாகதியாம்.

6. கஜேந்த்ராழ்வானுடைய சரணாகதியைச் சொல்லுமிடத்து "பரமாபத மாபந்நோ மநஸாசிந்தயத் ஹரிம்" என்கையாலே அங்கு மாநஸிக ப்ரபத்திமாத்ரமே யென்று கொள்ளலாம். "நாராயணாவோ மணிவண்ணா நாகணையாய்! வாராய் என்னாரிடரை நீக்காய், என வெகுண்டு தீராத சீற்றத்தால் சென்று" [சிறியதிருமடல்] என்றிது முதலான பல ஸூக்திகளுக்கிணங்க வாசிக ப்ரபத்தியும் கஜேந்த்ராழ் வான் பக்கலிலேயுண்டென்று கொள்வதிலும் குறையில்லை. இதைப் பற்றின விரிவு பின்னர் வரும்.

7. த்ரௌபதி விஷயத்தில் "கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம்" என்கிற பகவதுக்தியையும் சேர்த்துப் பார்க்கிறபோது வாசிக ப்ரபத்தியும் நேர்ந்திருக்கிறதென்பது அறுதி யிடலாகிறது. "भगवत्प्रवृत्तिविरोधि स्वप्रवृत्ति निवृत्तिः प्रपत्तिः—[பகவத்ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திः ப்ரபத்தி"] என்கிற நம் பூர்வா சார்யர்களின் திவ்யஸூக்தியின்படி கஜேந்த்ராழ்வானிடத்தில் "கஜ ஆகர்ஷதே தீரே" என்னப்பட்ட ப்ரவ்ருத்தியிலிருந்து ஓய்கைதான் ப்ரபத்தியென்றும், த்ரௌபதியிடத்தில் புடவையைத் தன்கையால்

இறுக்கிக்கொள்ளுதலாகிற ஸ்வப்ரவ்ருத்தியிலிருந்து ஓய்கைதான் ப்ரபத்தி யென்றும் சொல்லுவதுமுண்டு. வாசிககாயிகங்கள் அந்தஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியைத் தெரிவிப்பனவாகுமத்தனை.

8. நாமஸங்கீர்த்தன மென்று தனிப்பட்ட ஒரு உபாயமுண்டு; த்ரௌபதியிடத்தில் ப்ரஸ்தாவிக்கப்படுவது அதுவன்று; சரணாகதியின் ஓர் உறுப்பான நாமோச்சாரணமேயாயிற்று. அது காரியம் செய்தது என்று கூறுவதனால் ப்ரபத்தியிற் காட்டில் வேறொன்று காரியஞ்செய்ததாகக் கூறினதாகாது. மூமுக்ஷுப்படியில் வாச்யனான எம்பெருமானிற் காட்டில் வாசகமான திருநாமத்திற்கு ப்ரபாவமருளிச் செய்யப்புகுந்த விடமாகையாலே அதற்கு அநுகுணமாக "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே" என்றருளிச் செய்தது ரஸோக்தியில் சேரும். 'ப்ரபத்திதானே புடவை சுரந்தது' என்றாலுங்கூட, புடவை சுரத்தலாகிற பலப்ரதானம் பரமசேதனனான ப்ரபத்தவ்யனுக்கு ஸம்பாவிதமாகுமே யல்லது அசேதநக்ரியாரூபமான ப்ரபத்திக்கு ஸம்பவியாதென்பதை எம்பெருமானார் தொடங்கி மணவாளமாமுனிகளீறாகவுள்ள ஸகலாசார்யர்களும் ஒருமிடறாகவருளிச் செய்யக்காண்கிறோம். *கெடலிலாயிரத்துள்ளிவைபத்தும், கெடலில் வீடு செய்யும் கிளர்வார்க்கே* *தெருள்கொள்ளச் சொன்ன வோராயிரத்துளிப் பத்து, அருளுடையவன் தாளணைவிக்கும் முடித்தே* என்றிவை முதலான நிகமனப் பாசுரங்கள் பலவற்றிலும் பாசுரமே பலன்கொடுப்பதாகச் சொல்லியிருந்தாலும் பாசுரங்கேட்டு ப்ரஸந்நனான எம்பெருமான்தான் பலன் கொடுப்பனென்பதிலே தாற்பரிய மென்று விசதமாக வியாக்கியானங்கள் செய்யப்பட்டிருக்கின்றன.

9. ஆக, ப்ரபத்தியின் பலனாக வஸ்த்ரவ்ருத்தியாயிற்று என்றதனோடு, திருநாமஞ் சொன்னதின் பலனாக வஸ்த்ரவ்ருத்தியாயிற்று என்றதனோடு வாசியற இரண்டும் ஸமாநார்த்தகமேயொழிய ஈஷத்தும் வாசியில்லை. எந்த ஸந்தர்ப்பத்திலும் பலனளிப்பவன் எம்பெருமானே யல்லது ப்ரபத்தியுமன்று, நாமோச்சாரணமுமன்று. *"फलमत उपपत्तेः"* *[பலம் அதஃ உபபத்தேஃ] என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்தின் ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்வாமி யருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளிவை; "स एव हि सर्वज्ञः सर्वशक्तिर्महोदारो यागदानहोमादिभिरुपासनेन चाराधित ऐहिकामुष्मिकभोगजातं स्वस्वरूपावाप्तिरूपमपवर्गं च दातुमीष्टे ; न ह्यचेतनं कर्म क्षणध्वंसि कालान्तरभाविफलसाधनं भवितुमर्हति" என்று. ப்ரபத்தி பண்ணினாலும் நாமஸங்கீர்த்தநம் செய்தாலும் மற்று எது செய்தாலும் அவை எம்பெருமான் திருவுள்ளத்தில் உகப்புக்கு உறுப்பாகுமத்தனையல்லது அவை நேரே பலனளிப்பவையல்ல. த்ரௌபதீ விஷயத்தில் பலனளித்தவன் எம்பெருமானே. பலனளிக்கும்

போது திருவுள்ளத்தில் உகப்பு உண்டாகியே தீரவேணும். அவ்வுகப்பு ப்ரபத்தியினுலுண்டாயிற்று என்று ஓரிடத்திலும், திருநாமோச்சாரணத்தினுலுண்டாயிற்று என்று மற்றோரிடத்திலும் சொல்லி யிருந்தாலும் இதில் முரண்பாடு சிறிதும் கிடையாது; இரண்டும் ஒன்றேயன்றி வெவ்வேறுபட்டதல்ல.

10. இதனை இன்னமும் சிறிது விவரிப்போம். த்ரௌபதீ வஸ்த்ராபஹார வ்ருத்தாந்தம் மஹாபாரதத்தில் ஸபாபருவத்தில் தொண்ணூறுமத்யாயத்தில் கூறப்பட்டுள்ளது. அதில் நாற்பத்தொன்று நாற்பத்திரண்டாவது ச்லோகங்கள்—“ज्ञ तं मया वसिष्ठेन पुरा गीतं महात्मना। महत्यापदि संप्राप्ते स्मर्तव्यो भगवान् हरिः॥ इति निश्चित्य मनसा शरणागतवत्सलम्। आकृष्यमाणे वसने द्रौपदी कृष्णमस्मरत्॥” என்றுள்ளது. இதனுல் த்ரௌபதி மாநஸிகமாக ப்ரபத்திபண்ணினுளாகவே ஏற்படுகிறது. வஸிஷ்ட மஹார்ஷியும் “ஸ்மர்த்தவ்யோ பகவாந் ஹரி:” என்றே சொல்லிவைத்திருந்தாராகையாலே அவருபதேசித்ததும் மாநஸிக ப்ரபத்தியே. இதற்குமேல் “சங்க சக்ர கதாபாணே!” என்று தொடங்கி ஆறு ச்லோகங்களினுல் அவள் மிகவும் கதறினதாகத் தெரியவருகிறது. அங்கு முடிவில் ஊன்றிப்பார்த்தால் “प्रपन्नां पाहि गोविन्द कुरुमध्येऽवसीदतीम्। इत्यनुस्मृत्य कृष्णं सा हरिं त्रिभुवनेश्वरम्। प्रारुदद्दुःखिता राजन् मुखमाच्छाद्य भामिनी॥” என்கிற விடத்தில் “அநுஸ்ம்ருத்ய” என்றே சொல்லியிருக்கையாலே அங்குள்ளதெல்லாம் நெஞ்சி லோடினதைச் சொன்னபடியே யாகிறது. “கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணு மாம் தூரவாஸிநம்” என்கிற கண்ணபிரானுடைய நிர்வேத ச்லோகத்தில் ‘ஆக்ரந்தத்’ என்றிருக்கையாலே உரக்கக் கத்தினுளென்று தெரியவருகின்றதே யென்று சிலர் கலங்குவர்கள். உள்ளொலாமுருகிக் குரல்தழுத்து நின்றநிலைதான் ஆக்ரந்தனமாகச் சொல்லப்பட்டது. அது ப்ரபத்திநிஷ்டைக்கு சைதில்யத்தை விளைவிக்கும்படியான வ்யாபாரமன்று.

11. சிலர், த்ரௌபதி சரணுகதி செய்தபோது அந்த சரணுகதியோடு நில்லாமல் கோவிந்தா கோவிந்தாவென்று பன்முறையும் திருநாம ஸங்கீர்த்தனம் செய்ததாகக் காண்கையாலே அந்த நாம ஸங்கீர்த்தநமாகிற உபாயாந்தரஸம்பந்தத்தினுல் சணற்கயிறுகண்ட ப்ரஹ்மாஸ்த்ரம் போலே ப்ரபத்தி நழுவிப்போனபடியாலே அது கார்யகரமாகாமற் போயிற்றென்றும், நாமஸங்கீர்த்தநபலமாகவே வஸ்த்ர வ்ருத்தி ஏற்பட்டதென்றும் சொல்லுவர்கள். இதில் சிறிதும் ஔசித்யம் காண்கின்றிலோம் த்ரௌபதிக்கு சரணுகதி நழுவிவிட்டதென்று சொல்லுவது ஸம்ப்ரதிபந்நமன்று. சரணுகதியினுல்தான்

அவள் பலன்பெற்றுளென்பது உறுதி. நாமஸங்கீர்த்தநமாகிற உபாயாந்தரத்தில் அவள் கைவைத்தாளென்றும், அதுதான் பலனளித்ததென்றும் ப்ரபத்தியானது அவளுக்கு வ்யபிசரித்துவிட்டதென்றும் சொல்லுகிற வார்த்தை ப்ராமாணிகமாகாது.

12. "ஆழ்வார்கள் ப்ரபத்தி பண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே" என்கிற ஸ்ரீவசநபூஷண ஸூக்தியின்படி ஆழ்வார்கள் பண்ணின ப்ரபத்தியிலும் அபரிமிதமான நாமஸங்கீர்த்தனங்களைக் காணுகின்றோம். * உலகமுண்ட பெருவாயனில் எத்தனை திருநாமங்கள் அநுஸந்திக்கப்பட்டனவென்று பார்க்குமளவில் அபரிமிதமான நாமங்கள் காணலாம். இதனால் சணல்கண்ட ப்ரஹ்மாஸ்த்ரம் போலே ஆழ்வாருடைய ப்ரபத்தி நழுவிவிட்டதென்று சொல்லுவாருண்டோ? ப்ரபத்தி நிஷ்டர்கள் தங்களுடைய நிஷ்டையை வெளிக்காட்டக்கூடிய சப்தராசிகளை உச்சாவசமாகப் பொழிவதுண்டு; அவை ஆர்த்தியின் கனத்தைக் காட்டுவதிலே பர்யவஸித்து நிற்குமேயல்லது உபாயாந்தர ப்ரவ்ருத்தியாகி சணற்கயிற்றின் ஸ்தானத்திலே நிற்கமாட்டா. எம்பெருமானார் சரணாகதிகத்யத்திலே "சரணமஹம் ப்ரபத்யே" என்றளவோடு நிற்கவில்லையே அங்குள்ள வாக்விஸ்தரங்கள் சணல் ஸ்தானத்திலே நிற்பனவென்று நெஞ்சாலும் நினைக்கத் தகாதே.

13 கிம் பஹுநா? த்ரௌபதி செய்தது சரணாகதியே. அவள் மாநஹாநி நேராவண்ணம் காத்தருள வேணுமென்று இவ்வளவுக்காக ப்ரபத்திபண்ணினளேயல்லது கண்ணபிரான் ஸாக்ஷாத்தாக ஓடிவர வேணுமென்று ப்ரபத்தி செய்திலள். அவள் கோலின பலன் கைபுகுந்ததென்பதில் ஸந்தேஹமில்லை. பட்டர் ஸஹஸ்ரநாமபாஷ்யத்தின் உபோத்காதத்தில் நாமஸங்கீர்த்தனத்தை ஸ்வதந்த்ரோபாயமாக வைத்து அருளிச்செய்திருக்கிற விஷயங்கள் தனிப்பட்டவை. ப்ரக்ருதத்தில் த்ரௌபதி நாமஸங்கீர்த்தனத்தைத் தஞ்சமாகப் பற்றினவளல்லள். சரணாகதியைத்தான் தஞ்சமாகக் கொண்டாள். அவள் பண்ணின நாமோச்சாரணம் சரணாகதியின் உள்ளீடானதொன்றேயொழிய வேறுபட்டதன்று.

14. மேகம்பெய்ததனால் நெல்விளைந்தது என்று ஒருவன் சொல்லுகிறான்; தண்ணீர் பாய்ச்சபடியாலே நெல் விளைந்தது என்று மற்றொருவன் பேசுகிறான். இந்த வார்த்தைகளில் பரஸ்பரவிரோத சங்கைக்கு அவகாசமுண்டோ? இதுபோலவே ப்ரபத்தியின் பலனாக வஸ்த்ரவ்ருத்தியாயிற்று என்று சொல்லுவதும், திருநாமம் சொன்னதின் பலனாக அதுவாயிற்று என்று சொல்லுவதும் வ்யாஹதங்களல்லவென்று கொள்ளக்கடவது. ... ... *

முதல் தரங்கம் முற்றிற்று.

*ஜகதாசார்ய ஸூக்திஸுதாநிதியில்*

# இரண்டாவதுதரங்கம்—த்ரௌபதியின் ரக்ஷணம்

15. *த்ரௌபதியானவள் மஹாஸபையில் துச்சாஸநனால் பரிபவப்படுத்தப்படுகிற ஸமயத்திலே அவள் த்வாரகாநாதன் திருவடிகளிலே ப்ரபத்திபண்ணி ரக்ஷணம் பெற்றாளென்று சொல்லப்படுகிறது. ரக்ஷணமாவது என்ன? என்று ஆராயுமளவில் அநிஷ்டத்தைப் போக்கி இஷ்டத்தைத் தருகையே ரக்ஷணமென்று மஹான்கள் கூறுகின்றார்கள். இஷ்டத்தைத்தருகை அநிஷ்டத்தைத் தவிர்க்கை என்கிற இரண்டில் ஏதேனுமொன்று செய்தால் ரக்ஷணமாகாது: இரண்டும் செய்தால்தான் ரக்ஷணமாகும். ஆனால் ரக்ஷ்யபூதன் இரண்டையும் கோராமல் இரண்டத்து ஒன்றையே கோரியிருந்து அவ்வொன்றை நிறைவேற்றினால் அது ரக்ஷணமாகாதோ? என்று கேட்கவேண்டா. ஆகும். ஆனாலும் ரக்ஷணம் செய்யுமிடங்களில் அர்த்தாத் இரண்டும் ஸித்தித்தேதீரும். இராமன் விச்வாமித்ரயாகத்தை ரக்ஷித்தானென்கிறோம். விச்வாமித்திரமுனிவர் தம்முடைய வேள்விக்கு இடையூறு விளைக்கும் ராக்ஷஸர்களை வதம் செய்யவேணுமென்று [அநிஷ்டநிவ்ருத்தியை மாத்திரம்] அபேக்ஷித்திருந்தாலும் ஸ்ரீராமபிரான் செய்தருளின ரக்ஷணமானது அநிஷ்டநிவாரண ரூபமாகவும் இஷ்டப்ராபண ரூபமாகவும் கலைக்கட்டியிருக்கின்றது. ராக்ஷஸவதம் செய்தது அநிஷ்ட நிவாரணம். யஜ்ஞம் குறையற நடந்தேறும்படிசெய்து அவப்ரதம் செய்வித்தது இஷ்டப்ராபணம். இவ்விதமாகவே எங்கும் காணலாம்.*

16. *த்ரௌபதீரக்ஷணத்திலும் அநிஷ்டநிவாரணம் இஷ்டப்ராபணம் ஆகிற இரண்டு அம்சங்களும் காணலாம். த்ரௌபதியின் அபிப்ராயத்தாலே ப்ராபணீயமான இஷ்டம் எது? நிவாரணீயமான அநிஷ்டம் எது? என்று ஆராய்ச்சி செய்யவேணும். ரஜஸ்வலையான த்ரௌபதியை துச்சாஸநன் ஸபையிலேகொண்டு நிறுத்தித் துகிலுரியத் தொடங்கினான்; அப்போது அவளுக்கு மஹத்தான துக்கமுண்டாயிற்று. அதனால் சரணாகத வத்ஸலனான துவரைப்பிரானை நோக்கிச் சரணாகதி செய்தாள்.* "சங்கசக்ரகதாபாணே! த்வாரகாநிலயாச்யுத!, கோவிந்த! புண்டரீகாக்ஷ! ரக்ஷமாம் *சரணாகதாம்." என்று அநுஸந்தித்தாள். சரணாகதையான என்னை நீ ரக்ஷித்தருளவேணுமென்றாள். மேலும் "ஹா க்ருஷ்ண! த்வாரகாவாஸிந்! க்வாஸி யாதவநந்தந, இமாமவஸ்தாம் ஸம்ப்ராப்தாம் அநாதாம் கிமுபேக்ஷஸே?" என்றாள். இப்படிப்பட்ட துரவஸ்தையிலேயிருக்கிற அநாதையான என்னை உபேக்ஷிக்கலாகுமோ? என்றாள். இந்த ச்லோகத்தில்* "த்வாரகாவாஸிந்" *என்று சொல்லி உடனே 'க்வாஸி' எங்கிருக்கிறாயென்று கேட்டிருப்பதைப் பற்றி விமர்சிக்கவேணும். கண்ணன் த்வாரகையிலிருக்கிறானென்று எண்ணித்தானே த்வாரகாநிலய! என்றும் த்வாரகாவாஸிந்! என்றும்*

விளித்தாள். அங்ஙனம் விளித்தவள் நீ எங்கிருக்கிறாய்? என்று கேட்டதானது. * கருதரியவுயிர்க்குயிராய்க் கரந்தெங்கும் பரந்துறையுமொருதனி நாயகமான நீ இல்லாதவிடமுண்டோ? த்வாரகையில் மாத்திரமன்றே நீ யிருப்பது; அங்குமிங்குமெங்கு மிருக்கிறாயன்றோ. அப்படியிருக்கின்ற வுனக்கு நான் படும் பரிபவம் தெரியாமலா இருக்கிறது? என்னுமபிப்ராயத்தை யுட்கொண்டது.

17. இதைத் தானே அடுத்தபடி ஸ்பஷ்டமாகவும் சொல்லுகிறாள் —"கோவிந்த த்வாரகாவாஸிந்! க்ருஷ்ண கோபீஜநப்ரிய, கௌரவை: பரிபூதாம் மாம் கிம் ந ஜாநாஸி கேசவ" என்று. ஆகவே, நான் படும் பரிபவம் உனக்குத் தெரிந்திருந்தும் இதை நீ பரிஹரியாமலிருப்பது தகுதியோ? என்றிவ்வளவே த்ரௌபதியின் வார்த்தையிலிருந்து நன்றாகத் தெரியவருகின்றது. அவளுடைய பரிபவம் மேன்மேலும் வளர்ந்து செல்லாதபடி உடனே பரிஹரிக்கப்பட்டுவிட்டதென்பது ஸர்வஜநஸம்ப்ரதிபந்நமான விஷயம். ஆக, த்ரௌபதிக்கு விவக்ஷிதமான ரக்ஷணம் குறையற நடந்தேறியதென்று கொள்வதில் ஒருவிதமான விவாதமும் ஒருவர்க்கும் கிடையாது.

18. அந்த ஸமயத்தில் கண்ணபிரான் நேரில்வந்து ஸேவை ஸாதிக்கவேணுமென்பதை த்ரௌபதி கோரியிருந்தவளல்லள். கஜேந்த்ராழ்வான் முதலை துணிபடவேணுமென்கிற விரோதி நிரஸநத்தைக் கருதாமல் எம்பெருமான் நேரில் எழுந்தருளி ஸேவை ஸாதிக்கவேணுமென்பதையே அபேக்ஷித்திருந்தானென்பது "நாஹம் கலேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந, கரஸ்தகமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் தவ" என்கிற கஜேந்த்ரகண்டோக்தியாலும், "தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே" என்கிற திருவாய்மொழியாலும் ஸுஸ்பஷ்டம். இவ்விதமான அபேக்ஷை த்ரௌபதிக்கு இருந்ததில்லை. அந்த ஸமயத்தில் இஃது இருக்க ப்ரஸக்தியுமில்லை, கண்ணபிரான் தன்னுடைய அநிர்வசநீயமான குண விசேஷத்தினால் த்ரௌபதி பரிபவப்பட்டபோது ஐயோ! நான் நேரில் சென்று உதவப்பெற்றிலேனே!, அந்தோ! என் பிழைப்பு என்னாயிற்று' என்று துடித்ததுண்டு. இதனால் த்ரௌபதியானவள் கண்ணபிரானுடைய ஸமக்ஷஸமாகமனத்தை அப்போது விரும்பியிருந்தாளென்று கல்பிக்கலாகாது.

19. வஸ்துஸ்திதி இப்படியிருக்க, ஸ்ரீ க்ருஷ்ணன் நேரில் எழுந்தருளாமைக்குக் காரணமென்னவென்று லென்று அஸ்தானே ஒரு சங்கையைக் கிளப்பிக்கொண்டு, சரணாகதி செய்பவர்கள் புருஷகாரத்தை முன்னிட்டே பற்றவேணுமென்பது முறையென்றும், த்ரௌபதி அப்படி பற்றவில்லையென்றும் அதனாலேயே அவளுடைய சரணாகதி விபலமாகி ஸ்ரீ க்ருஷ்ணன் நேரில் எழுந்தருள நேராமல் போயிற்றென்றும் சிலர் சொல்லிக்கொண்டிருப்பது ப்ராமாணிகமன்று.

20. மற்றும் சிலர், ஸ்ரீருக்மிணிப்பிராட்டியானவள் சில ஔசித்யங்களை ஆலோசித்து கண்ணபிரானைக் கிளம்பவொட்டாமல் தன் லீலாவிசேஷங்களாலே போகரஸங்களில் அழுந்தச்செய்துவிட்டாளென்று கூறுவர். இதெல்லாம் ஹரிகதைக்காரர்களின் ஸபாவ்யாமோஹக வ்யாஹாரவிசேஷங்களத்தனை! மேலும் இவை ப்ரக்ருத ப்ரஸ்தாவத்தில் அத்யந்தம் அநுபயுக்தங்கள். அப்ராமாணிகங்களுமாம்.

## மூன்றாவது தரங்கம்

[முன்விரண்டு தரங்கங்களில் நிரூபித்த விஷயங்களுக்கு உபபாதனங்கள்]

21. பூர்வாசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளில் பரஸ்பரவிரோதமிருப்பதாக வைத்துப் பரிஹாரமுணர்த்துவதிற் காட்டிலும் உண்மையில் பரஸ்பரவிரோதமே கிடையாதென்று கண்டறிதல் சாலச்சிறக்கும். "பரஸ்பர விரோதம் ஸ்பஷ்டமாக விளங்கும்போது அஃது இல்லையென்று எங்ஙனே சொல்லலாகும்" என்று வாதிப்பவர்கள் ஊன்றித் தெளிவுபெறவேணும். அந்தத் தெளிவின் மார்க்கமே இங்கு உபபாதிக்கப்படுகிறது. த்ரௌபதி சரணாகதி செய்தாளென்பதை யாரும் மறுக்க முடியாது. சாஸ்த்ரஜ்ஞர்கள் "தர்மிக்ராஹக மாந ஸித்தம்" என்றொரு வார்த்தை சொல்லுவர்கள். அவ்வண்ணமாகவே இங்கும் "ரக்ஷமாம் சரணாகதாம்" என்கிற த்ரௌபதீ வசனத்தினாலேயே அவள் சரணாகதி செய்தாளென்பது ஸித்தமாயிராநின்றது. இதுபோலவே அவள் புடவை சுரக்கப் பெற்றாளென்பதும் ப்ரமாணாரூடமாயிராநின்றது. "யதநந்தரம் யத் பவதி தத் தஸ்ய காரணம்" என்கிற நியாயத்தின்படி சரணாகதி செய்தவுடனே வஸ்த்ரவிவ்ருத்தி கண்டோமாகில் இது சரணாகதியின் பலனேயென்று நிர்ணயிப்பதில் என்ன அருமை.

22. "தர்மபுத்ராதிகளுக்குப் பலம் ராஜ்யம்" என்கிற ஸ்ரீ வசநபூஷண ஸூக்திக்கு அர்த்த விசாரம் செய்யப்புகுந்து, தர்மபுத்ராதிகள் ப்ரபத்தியினால் அடைய விரும்பின பலன் என்று அர்த்தமா? அடைந்த பலன் என்று அர்த்தமா? என்று விகல்பித்து அடைய விரும்பின பலன் என்னவேணுமேயல்லது—அடைந்தபலன் என்னவொண்ணாது என்றெழுதுவதும் இதற்கு ப்ரமாணங்கள் காட்ட ப்ரயாஸங்கொள்வதும் வீணான ஆயாஸம். த்ரௌபதி மாநபங்க பரிஹாரத்தை யபேக்ஷித்தாள், அதனைப்பெற்றாள். விஷயம் முடிந்தது. இதைப்பற்றி மேலே விவரிப்போம்.

23. ஸ்ரீவசநபூஷணத்தில் ப்ரபத்திக்குப் பல நியமம் கிடையாதென்று ஸாதித்த பிள்ளை லோகாசார்யரின் திருவுள்ளம் என்ன? ப்ரபத்தியானது ஸகல பலன்களையும் கொடுத்துத் தீருமென்பதுதானே. அந்த ப்ரகரணத்தில் தர்மபுத்ராதிகளை எடுத்திருப்பது எதற்காக? இதற்

காகத்தானே. அங்கே காட்டப்பட்டுள்ள காக, காளிய, கஜேந்த்ர, விபீஷணாதிகளிடத்திலே ப்ரபத்தியை ஸபலமாகக் கண்டிருக்கிறோமே. அதேரீதியில் த்ரௌபதியிடத்திலும் தத்ஸாபல்யம் கண்டிருக்கிறோமே. இதை இல்லை செய்ய வொண்ணுமோ?

24. ஸ்ரீ ராமபிரானையும் இந்த ப்ரகரணத்தில் சேர்த்தெடுத்திருக்கிறதே; ' பெருமாளுக்குப் பலம் ஸமுத்ரதரணம் " என்று அருளிச் செய்யப்பட்டிருக்கிறதே; பெருமாளுக்கு அந்த பலன் ப்ரபத்தியினால் கைபுகவில்லையே! என்பார்க்குத் தெரிவிக்கப்படுகிறது. ப்ரபத்திக்கு அதிகாரி ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமுமுடையவன்" என்று ஸ்வாமி தாமே யருளிச்செய்திருப்பது ப்ரஸித்தம். ஸர்வலோக சரண்யரான பெருமாள் ப்ரபத்திக்கு அதிகாரியேயல்லர். *அஸமர்த்தம் விஜாநாதி மாமயம் மகராலய:* என்று, அனந்தரம் பெருமாள்தாமே அருளிச் செய்ததைக்கொண்டு ஈட்டிலே பெருமாள் ப்ரபத்திக்கு அதிகாரியல்லரிடத்திலே ப்ரபத்தி பலனளிக்கக்கண்டோமென்று காட்டுவதற்றென்றே முடிக்கப்பட்டிருக்கிறது. "*அஸமர்த்தம் விஜாநாதியென்பாராகாது" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. அப்படியிருக்க, இங்கு ஸ்வாமி பெருமாளையும் ப்ரபத்தாக்களிலே ஒருவராக எடுத்திருப்பது எதனாலே? என்கிற விசாரம் தனிப்பட்டது. இது பூருவர்களாலேயே சர்ச்சித்து முடிக்கப்பட்டிருக்கும் விஷயமாதலாலும் ப்ரக்ருதம் இந்த விசாரம் அநபேக்ஷிதமாகையாலும் விடுக்கப்படுகிறது. மேலேவிவரிக்கலாகும். த்ரௌபதிக்கு ப்ரபத்தியின் பலன் ஸித்தமாயிற்றென்பதே நூற்கொள்கை. இது மஹாபாரதத்தில் ஸுஸ்பஷ்டமென்பது பண்டே பரக்க நிரூபிதம்.

25. விசதவாக்சிகாமணிகளான மணவாளமாமுனிகளின் தெள்ளிய திவ்யஸூக்திகளுக்கு அரும்பத விளக்கங்கள் அநபேக்ஷிதம். பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளோடொப்ப மதிக்கத்தக்க பெருமையில் ஏகதேசமும் அரும்பதவுரைகளுக்குக் கிடையாதென்பது சர்வித சர்வணம். ஸ்ரீமத் எம்பார் ஜீயர்ஸ்வாமிக்கும் அண்ணாவப்பங்காருக்கும் மிக முற்பட்ட மஹாமதிகளால் இயற்றப்பட்ட ஈட்டரும்பதவுரையிலேயே ஆங்காங்கு விபர்யாஸங்கள் காணும்போது, மற்றையோர்களைப்பற்றி இங்கு வக்தவ்யமொன்றுமில்லை. அண்ணாவப்பங்காருடைய திருவுள்ளத்திற்கு முரணாக எம்பார்ஜீயர் எழுதியுள்ளவிடங்கள் பலவுண்டு. விரோதமில்லாதவிடங்களில் ஸம்ப்ரதிபத்திக்கு ஸம்வாதமாகக் கொள்ளலாமத்தனை. இது வஸ்துஸ்திதி தெரிவிக்கவேண்டியதற்காகத் தெரிவித்தபடி. ப்ரக்ருத ஸ்தலத்தில் அரும்பதவிளக்கத்தினால் ஸாதிக்கத்தக்கதோ பாதிக்கத்தக்கதோ எதுவுமில்லை. பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளை மாத்திரமே நாம் நிதியாகக்கொள்வோம்.

26. பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீ ராமாயணத்தில் பல ச்லோகங்களுக்கு விசேஷார்த்த வியாக்கியானம் செய்தருளியிருப்பது போல,

த்ரௌபதியின் சரணாகதி ச்லோகமான "சங்க சக்ரகதாபாணே!" இத்யாதிக்கும் இன்சுவைமிக்க வியாக்கியான மருளிச் செய்துள்ளார். (விவரிக்கிறோம்.) அந்தத் தனி ச்லோகத்தில் 'ரக்ஷமாம்' என்று ப்ரதீகமெடுத்து "ரக்ஷிக்கையாவது விரோதியைப் போக்குகையும் அபேக்ஷிதங்களைக் கொடுக்கையும்" என்றருளிச் செய்து, மேலே சரணாகதாம் என்றதின் விவரணத்தில் "இவளுக்கு வஸத்ரவர்தநமும் சத்ருஸம்ஹாரமும் அபேக்ஷிதம்" என்று அருளிச்செய்துவைத்தார். வஸ்த்ரவர்த்தநம் உடனே பலித்தது; சத்ருஸம்ஹாரம் நாளடைவில் பலித்தது. சத்ருஸம்ஹாரத்தையும் உடனே பலிப்பிக்கவல்ல ஆற்றல் கண்ணபிரானுக்கு இருக்கச்செய்தேயும் அதை விளம்பித்து முடித்ததானது கீதா சாஸ்த்ராவதாரணம் முதலியவற்றைக் கருதியென்றும், திருவாய்மொழியை அவதரிப்பிக்க வேண்டி ஆழ்வாருடையப்ரபத்தியை விளம்பேந ஸபலமாக்கினது போலவே இதுவுமென்றும் பெரியார்கள் நிர்வஹித்துள்ளார்கள்.

27. பெரியவாச்சான் பிள்ளை தாமே "சங்கசக்ரகதாபாணே!" என்ற விடத்து வியாக்கியானத்தில் "*தொழுங்காதல்களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே; அப்படியே கூராராழி வெண்சங்கேந்தி வந்தருளித் தனக்கு முகங்காட்டவேணுமென்று கருத்து." என்றருளிச் செய்திருப்பதை நோக்கிச் சிலர் மயங்கக்கூடும். அங்கு பிள்ளைதாமே உடனே விவரித்தருளியிருக்கிறார்; (எங்ஙனே யென்னில்;) "பின்பு இவளுக்காகவிறே *ஸ பாஞ்சஜந்யம் அச்யுத வக்த்ரவாயுநா * ஹ்ருதயாநி வ்யதாரயத் * என்று கலங்கச் சங்கம் வாய்வைத்ததும்—ஆழி கொண்டன்றிரவி மறைத்ததும்—கொல்லாமாக்கோல் கொலை செய்து பாரதப் போர் எல்லாச் சேனையுமிருநிலத்தவித்ததும்." என்று. இந்த ஸ்ரீஸூக்தியினால் தேறினதென்னவென்றால், காலக்ரமேண கிடைக்கக் கூடியவற்றையே த்ரௌபதி வ்யங்க்யமாக ப்ரார்த்தித்தாளென்றும், அந்த ப்ரார்த்தனையும் க்ரமேண ஸபலமாயிற்றென்றும் தேறிற்று.

28. (புண்டரீகாக்ஷ!) என்றவிடத்தில் "உன் தாமரைக்கண்களால் நோக்காதொழிவதென்? என்னுடைய ஆபத்துக்கு அவலோகனதானமன்றோ அபேக்ஷிதம்" என்று வியாக்கியானம் செய்தருளியிருப்பதும் சிலரை மயங்கப்பண்ணும். இதெல்லாம் க்ரமேண நேரவேண்டுமென்றபேக்ஷித்தபடியேயொழிய அந்த க்ஷணந்தன்னிலே நேரவேணுமென்று அபேக்ஷித்ததன்று. இங்குச் சிலர் மயங்கவும் கலங்கவுங்கூடுமென்று திருவுள்ளம்பற்றியே கலக்கமற முடிவாகப் பெரியவாச்சான் பிள்ளை தாமே யருளிச்செய்த ஸ்ரீஸூக்திகள்—"இவளுக்கு வஸ்த்ரவர்தநமும் சத்ருஸம்ஹாரமும் அபேக்ஷிதம்" என்று. (ரக்ஷமாம்) என்றவிடத்து வியாக்கியானத்தில் "* அலமன்னுமடல்* இத்யாதி." என்று பெரிய திருமொழிப்பாசுரத்தை யெடுத்துக் காட்டியுமிருக்கிறார் பெரியவாச்சான் பிள்ளை. அப்பாசுரத்தில் தெரிவிக்கப்பட்ட காரியமே த்ரௌ

பதியினால் இங்கு ப்ரார்த்திக்கப்பட்ட ஸ்வரக்ஷணத்தில் சேர்ந்ததென்று காட்டியருளினபடி.

29. ஸதஸ்ஸில் பரிபூர்ணையான த்ரௌபதிக்கு ரஜஸ்வலாவஸ்தை யென்பது நிர்விவாதமாதலால் அப்போதே கண்ணபிரான் நேராக வந்தருளி ஸேவை ஸாதிக்கவேணுமென்று அவள் கோரினாளென்பது பொருந்தாது. பொருந்தாத இந்த அர்த்தத்தை ஒரு ஆசார்யருடைய ஸ்ரீ ஸூக்தியும் காட்டிக்கொடாதென்பது திண்ணம். கண்ணபிரான் நேரில்வந்து ஸேவை ஸாதிக்கவேணுமென்பதும் த்ரௌபதிக்கு நெஞ்சில் ஒரு மூலையில் அபேக்ஷிதமாயிருந்ததென்று கொண்டாலும் ப்ரக்ருதத்தில் அதனால் வருவதொரு ஹாநியில்லை.

30. "த்ரௌபதி திருநாமத்தையும் சொல்லி ப்ரபத்தியையும் செய்தாள்; ஆனாலும் அவள் திருநாமஸங்கீர்த்தனமடியாகவே பயன் பெற்றவள்; வஸ்த்ரவ்ருத்தி சரணாகதியின் பயனாக விளைந்ததன்று" என்கிற வார்த்தை மஹாபாரதாதி ஸகலக்ரந்த விருத்தம். இந்த வார்த்தை எங்ஙனே யிராநின்றதென்னில், ஸ்ரீராமன் அம்புகளை சார்ங்கத்திலே தொடுத்து அரக்கருடலில் ப்ரயோகமும் பண்ணினான்; ஆனாலும் அம்புகளை வில்லில் தொடுத்ததனால்தான் ராக்ஷஸவதம் விளைந்தது; பாணப்ரயோகம் செய்ததனால் அது விளையவில்லை—என்னுமாபோலே யிருந்தது. அதற்குமிதற்கும் எள்ளளவும் வாசிகிடையாது.

31. "ப்ரபத்திசரீரத்தில் திருநாமஸங்கீர்த்தனம் ஓர் உறுப்பாயுள்ளதென்று நாமெழுதியிருப்பது ஒருவர்க்கும் மறுக்கமுடியாதது. திருநாமஸங்கீர்த்தனத்தைத் தனிப்பட்ட காரியமாக வைத்துப் பார்த்தாலல்லவோ இரண்டு க்ரந்தங்களுக்கும் பரஸ்பரவிரோத சங்கை உண்டாகும். நாமஸங்கீர்த்தனத்தை ப்ரபத்தியிலேயே அவயவைகதேசமாக இசையவேண்டின பின்பு விரோத சங்காப்ரஸக்தி தானுமில்லையே. வஸ்த்ரவ்ருத்தி ப்ரபத்தியின் பலமன்றென்று சொல்லுவது நிராதாரமானது. எந்த ப்ரமாணத்தாலும் அதுதேறாது. த்ரௌபதீ வ்ருத்தாந்தத்திற்கு முதன்மையான ப்ரமாணம் மஹாபாரதம். எந்த ஆசார்யரும் சரித்திரங்களைச் சொல்லுமிடத்து இதிஹாஸ புராணங்களை யனுஸரித்துச் சொல்லக் கடமைப்பட்டவர்களேயல்லது தாங்கள் ஸ்வதந்த்ரமாக ஒன்றும் சொல்லகில்லார். அந்த மஹாபாரதத்தில் த்ரௌபதி ப்ரபத்தி பண்ணினதும் அதனால் வஸ்த்ரவ்ருத்தி பெற்றதும் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருக்க, "வஸ்த்ரவ்ருத்தி ப்ரபத்தியின் பலமன்று" என்று சொல்லும் வார்த்தையானது மஹாபாரதம் நடையாடும் நாட்டில் விலை செல்லக்கூடியதன்று.

32. மஹாபாரதே ஸபாபர்வணி தொண்ணூறுமத்யாயத்தில் (42 ஆம் ச்லோகத்தில்) த்ரௌபதியின் ப்ரபத்தி தெரிவிக்கப்பட்டது. 48 ஆம் ச்லோகம் வரை அவளுடைய ஆர்த்தியின் கனம் விவரிக்கப்

பட்டது. உடனே *தஸ்ய ப்ரஸாதாத் த்ரௌபத்யா: க்ருஷ்யமாணே அம்பரே ததா, தத்ரூபமபரம் வஸ்த்ரம் ப்ராதுராஸீதநேகச:* என்று ப்ரபத்தியின் பயனாகவே புடவை சுரந்த சரிதை பேசப்பட்டிருக்கிறது. ப்ரபத்தி விபலமாய்விட்டதென்கிற வார்த்தை மஹாபாரதத்திற்கு நெடுந்தூரத்திலே நிற்கவேண்டுமத்தனை.

33. நம்மாழ்வார் (திருவிருத்தத்தில்) "கண்ணன் வைகுந்தனோடு என்னெஞ்சினாரைக் கண்டாலென்னைச் சொல்லி அவரிடை நீரின்னஞ் செல்லீரோ" என்றும் (திருவாய்மொழியில்) * என்னெஞ்சினாருமங்கே யொழிந்தார், உழந்தினி யாரைக் கொண்டென்னுசாகோ? * என்று மிப்புடைகளிலே அருளிச்செய்த பாசுரங்களை மேலெழப் பார்ப்பவர்கள் ஆழ்வாருடைய திருவுள்ளமானது ஆழ்வாரை விட்டுப் பிரிந்தே போய் விட்டதென்று சொல்லுவதுண்டு. நெஞ்சு பிரிந்துபோய்விட்ட பிறகு ஆழ்வார் எப்படி பாசுரம் பாடுகிறாரென்று கேட்டால் என்னவிடை? நெஞ்சுக்கு விஷயாந்தர வ்யாஸங்கலேசமுமில்லை யென்பதைத் தெரி விப்பதற்காக வாக்விந்யாஸ சமத்காரமிது வென்று அறியப்பெறுவார் சிலரே. அதுபோலவே, திருநாமம் சொன்னவர்களுக்குப் பலன் தப்பாது என்னுமிடத்தைத் தெரிவிப்பதற்காக "அவன் தூரஸ்தனானாலும்" இத்யாதி ஸ்ரீஸூக்திகள் அவதரித்தபடி. "பிராட்டியுமவனும் விடிலும் திருவடிகள் விடாது; திண்கழலாயிருக்கும்" என்ற முமுக்ஷுப் படி ஸ்ரீஸூக்தியே இதற்கு நிதர்சநம். உண்மையில் அவன் காரியம் செய்தானா? திருநாமம் ஸ்வதந்த்ரமாய்க் காரியம் செய்துவிட்டதா? என்று ஆர அமர விசாரிக்குமளவில் 'திருநாமத்தால் ப்ரஸந்நனான அவன்தான் கார்யம் செய்தானென்று சொல்லிக் கைகூப்பி நிற்க வேண்டுமத்தனையே. திருநாமம் த்வாரமாகத்தான் நிற்கும். ரஹஸ்யத்ரயமீமாம்ஸா பாஷ்யத்தில் "மந்த்ரகரணகரக்ஷணஸ்ய ஸ்வரூபேண பகவத்கர்த்ருக ரக்ஷண பர்யவஸாயித்வம்" நிகமனம் செய்யப்பட்டிரா நின்றது. அதை நிரஸிக்க ஸர்வசக்தனான அவன்தன்னாலுமாகாது. "பர்யவஸாயித்வேபி" என்று சொல்லி மேலே யெழுதியிருப்பதானது மூல ஸ்ரீஸூக்திக்குச் சேமம் செய்யவேண்டிய முறையில் அமைந்தது.

34. முமுக்ஷுப்படி ஸூக்திக்கும் ஸ்ரீவசநபூஷண ஸூக்திக்கும் பரஸ்பர விரோத ப்ரஸங்கமே கிடையாதென்று நாம் நிர்வஹித்த கட்டளையே தஞ்சம். இங்ஙனன்றிக்கே, விரோதமுண்டுதானென்றால் அந்த விரோதம் த்ரிமூர்த்திகள் திரண்டு வந்தாலும் பரிஹரிக்க வொண்ணாததேயாகும். த்ரௌபதி ப்ரபத்தி பண்ணினதும், அந்த ப்ரபத்தியினால் வஸ்த்ரவ்ருத்திபெற்றதும் மஹாபாரதத்தில் பேர்க்கவும் பேராதபடி கல்வெட்டாக விளங்காநிற்க, அதைக் கண்ணழித்துச் செய்யும் விரோதபரிஹாரம் ப்ராமாணிகர்களால் ஏற்கத்தக்கதன்று. மஹாபாரதத்தில் த்ரௌபதி ப்ரபத்தி பண்ணினதாகச் சொல்லப்பட வில்லை யென்று கொள்ளுகிறோமென்றும், அவள் நாமஸங்கீர்த்தனம்

பண்ணினதாகவே சொல்லப்படுகிறதென்று கொள்ளுகிறோமென்றும், அந்த நாமஸங்கீர்த்தனத்தின் பயனாகவே வஸ்த்ர வ்ருத்தியாயிற்றென்று மஹாபாரதத்தின் கருத்தாகச் சொல்லிவிடுகிறோமென்றும் சொல்லப்பார்க்கில், அப்போது 'த்ரௌபதி ஸ்நாதையாயன்றே ப்ரபத்தி பண்ணிற்று'' இத்யாதி ஸ்ரீவசந பூஷண ஸூக்திகள் நிராதாரமாய் முடியும். இல்லாத விரோதமொன்றை ஏற்றிட்டுப் பரிஹரிக்கப்புகுந்ததன் பயன் ப்ரபல விரோத ப்ராபணமாய் முடிந்து நிற்கும்.

## நான்காவது தரங்கம் (விபுலவிசத நிரூபணங்கள்.)

35. ப்ரபத்திக்குப் பலநியமமில்லையென்று அருளிச்செய்த பிள்ளை லோகாசார்யருடைய திருவுள்ளமென்னவென்று பார்க்கவேண்டியது அவசியம். எந்தபலத்தை யுத்தேசித்தும் ப்ரபத்திபண்ணலாமென்று இவ்வளவேயன்று திருவுள்ளம். மணவாளமாமுனிகள் * ஸா ஹி ஸர்வத்ர ஸர்வேஷாம் ஸர்வகாம பலப்ரதா * என்கிற ஸநத்குமார ஸம்ஹிதா வசனத்தையெடுத்துக் காட்டியருளி ப்ரபத்தி ஸகலபலன்களையுமளிக்க வல்லது என்பதே ஸ்ரீவசநபூஷண ஸூக்தியின் திருவுள்ளமாக விசதீகரித்துள்ளார். அப்படிப்பட்ட ப்ரகரணத்தில் ப்ரபந்நையாகக் கூறப்பட்டிருக்கிற த்ரௌபதிக்கு ப்ரபத்தியினால் பலனில்லையென்றால் இது எங்ஙனே பொருந்தும்? ஒரு மருத்துவனுடைய பெருமையைப் பேசுமிடத்து 'இவர் சிகித்ஸிக்குமிடத்தில் வியாதி நியமமில்லை' என்று சொல்லி, இன்னின்ன வியாதிகளின் பரிஹாரார்த்தமாக இன்னாரின்னார் இவரிடம் வந்து பணிந்தாரென்றும் சொல்லிவைத்தால், அப்படி வந்து பணிந்தவர்கள் யாவரும் வியாதி தீரப்பெற்றார்களென்பது அங்கு விவக்ஷிதமா? வந்தவர்கள் மரணமடைந்தார்களென்பது விவக்ஷிதமா! என்று பார்க்கவேணும். ''வியாதிகளின் பரிஹாரார்த்தமாக வந்து பணிந்ததை மாத்திரமே நான் சொல்லவல்லேன்; பிறகு அவர்கள் கதி என்னாயிற்றோ, அது தெரியாது'' என்னுமவன் மருத்துவனுடைய பெருமையைச் சொல்லுபவனாக ஆவனோ? ஒருகாலுமாகான். ''ஆரே துயருழந்தார் துன்புற்றாராண்டையார்?—நாளுமடைந்து'' என்று பேயாழ்வார், ப்ரபத்தி பண்ணினவர்களுக்குப் பலன் தப்பாதென்று திண்ணமாக வருளிச் செய்கிறார்.

33. ஒரு வித்வானுடைய பெருமையைச் சொல்லவந்தவர் ''இவர் ப்ரவசனம் செய்யுமளவில் சாஸ்த்ர நியமமில்லை'' என்றால் ஸகல சாஸ்த்ரங்களையும் இவர் அவலீலையாக ப்ரவசநம் செய்துவருகிறாரென்பது விவக்ஷிதமேயொழிய, 'சாஸ்த்ரங்களை வாசிக்க இவரிடம் பலரும் வருகிறார்களத்தனை, பிறகு என்னாகிறதோ தெரியாது' என்பதன்று. அப்படிச் சொன்னால் அது பெருமையைச் சொல்லுவதாக ஒரு நாளுமாகாது, சிறுமையையே சொன்னபடியாம். இதை நன்கு குறிக்

கொள்ளவேணும். ப்ரபத்திக்குப் பல நியமமில்லையென்றும், பலநியம மின்றிக்கேயொழிந்தபடி யென்னென்னில்: என்று மருளிச்செய்த பிள்ளைலோகாசார்யர் ப்ரபத்தி ஸகல பலன்களையும் வரையாதே கொடுத்துத் தீருகிறது என்கிறாரே யல்லது, வேறொன்றை விவக்ஷிக்கிறாரல்லர். பெயரிட்டுச் சில வ்யக்தி விசேஷங்களை நிர்தேசித்திருப்பதும் அவர்கள் ப்ரபத்தியினால் பேறு பெற்றார்களென்கைக்காகவே. இந்த ச்ரேணியில் ஸ்ரீராமபிரானையும் சேர்த்திருக்கிறதே யென்பது கொண்டு கலங்கவேண்டாவென்று முன்னமே சொல்லியாயிற்று. அதைப்பற்றியும் விவரிக்கிறோம்.

37. "விஷய நியமமேயுள்ளது" என்னப்பட்ட விஷய நியம நிர்ப்பந்தத்தைக் கணிசியாமல் அஸ்தானே ப்ரபத்தி பண்ணுவது தகாது என்பதைக் காட்டுவதற்காகவே ஸ்ரீராமாயணத்தில் ஸமுத்ர சரணாகதி யென்பது வந்துபுகுந்தது. யுத்தகாண்டத்தின் முதலிலேயே * ஸர்வதா ஸுஸமர்த்தோஸ்மி ஸாகரஸ்யாஸ்ய லங்கநே * என்று வாய்விட்டுச் சொல்லியிருக்கின்ற பெருமாள் உவர்க்குழியைச் சரணம் புகவேண்டிற்றில்லை. * ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்துமர்ஹதி * என்ற பக்தவசனத்திற்கு உடன்படுகின்றமை காட்டுதல் ஒன்று. அஸ்தானே ப்ரபத்தி பண்ணினால் மநஸ்தாபந்தான் அதற்குப் பலன் என்று காட்டுதல் முக்கியமானது. அதனைக் காட்டவேண்டியது சாஸ்த்ர க்ருத்யமாகையாலே அது காட்டவேண்டியே (ஸ்ரீவசநபூஷண திவ்ய சாஸ்த்ரே) பெருமாளுடைய சரணாகதியை ஊடே சேர்த்ததென்று பூருவர்களால் தத்துவம் தெரிவிக்கப்பட்டுள்ளது. பெருமாளொருவரைத் தவிர்த்து மற்றவர்களின் ப்ரபத்திகளெல்லாம் பலனோடு சந்தித்தவையே யொழிய நிஷ்ப்பலமான ப்ரபத்தி ஒன்றுகூட அருளிச்செய்ததில்லை.

38. "திரௌபதி ப்ரபத்தி பண்ணினது வாஸ்தவம்; அது நாமோச்சாரணமாகிற உபாயாந்தரஸ்பர்சத்தாலே [சணல் கண்ட ப்ரஹ்மாஸ்த்ரந்யாயேந] நழுவிப்போயிற்று" என்கிற வாதமானது இந்த வாதம் செய்பவர்களாலேயே நிரஸிக்கப்பட்டொழிந்ததாகும். ப்ரபத்தி கார்யகரமாகவில்லையென்றால் அதைக் கெடுக்கவந்த நாமோச்சாரணம் மாத்திரம் எங்ஙனே கார்யகரமாகும்? திருவடிதிறத்தில் ப்ரஹ்மாஸ்த்ரத்தைக் குலைக்கவந்தது சணற்கயிறு; அங்கு ப்ரஹ்மாஸ்த்ரம் நிஷ்ப்பலமானது போலவே சணற்கயிறும் நிஷ்ப்பலமாயிற்றே. ப்ரபத்திக்கு உறுப்பாகச் செய்யும் நாமஸங்கீர்த்தனத்தை சணல் போன்ற விரோதிஸ்தானத்திலே வைத்துப் பேசுமளவில் அபரிமிதமான ஆபத்துகள் நேரும். ஆழ்வார் முதலானோருடைய ப்ரபத்திக்கும் நழுவுதல் சொல்லவேண்டிவரும். "ஆழ்வார் முதலானோருடைய ப்ரபத்திகள் நழுவிவிட்டனவென்று கொண்டாலும் உண்டாகும் குற்றம் யாதோ அறிகிலோம்" என்பார்க்கு ஒன்றிலும் நிலையில்லாமையே

தேறி நிற்கும். "நாராயணாவோ மணிவண்ணாநாகணையாய்!" என்று நாமோச்சாரணம் பண்ணின கஜேந்த்ராழ்வான், (கத்யத்தில்) அபரிமிதநாமோச்சாரணம் பண்ணியருளின எம்பெருமானார்......... முதலான ஸகலருடையவும் ப்ரபத்திகள் நழுவிவிட்டனவென்றே சொல்லித் தீரவேணும். நாமோச்சாரணமில்லாமல் ப்ரபத்தி செய்தவர் யாவர்? என்று தேடிப்பிடிக்கவேணும்.

39. நம்மாழ்வாருடையவும் எம்பெருமானாருடையவும் ப்ரபத்தி ப்ரகாசக ஸ்ரீஸூக்திகளில் காணும் நாமோச்சாரணங்கள் ப்ரபத்திக்கு உபயுக்தங்களான குணவிசேஷங்களைத் தெரிவிப்பனவென்றும், த்ரௌபதியின் ப்ரபத்தி ப்ரகாசக ப்ரகரணத்திலுள்ள நாமோச்சாரணங்கள் அப்படிப்பட்டவையல்லவென்றும் சொல்லிவிடுகிறோ மென்னில்; இதற்கொரு ஸம்ப்ரதிபந்நமான ப்ரமாணம் காட்டியே யாகவேணும். அதுகாட்ட இயலாது. "நம்மாழ்வார்போல்வாருடைய ப்ரபத்தியும் த்ரௌபதியின் ப்ரபத்தியும் துல்யமாய்விடுமா" என்றும், "அவர்களுடைய ப்ரபத்தி ப்ரகாசக ஸ்ரீஸூக்திகளிலுள்ள நாமஸங்கீர்த்தனங்களுக்கும் த்ரௌபதீ ப்ரபத்தி ப்ரகரணத்தில் காணப்படும் நாம ஸங்கீர்த்தனங்களுக்கும் நெடுவாசியுண்டு" என்றும் சிலர் கருதுவதைப் பற்றிச் சொல்லுகிறோம்; த்ரௌபதி நம்மாழ்வாரைப்போலே திருவாய் மொழி ஸாதிக்கவில்லையென்றும், எம்பெருமானாரைப்போலே ஸ்ரீபாஷ்ய கத்யாதிகள் ஸாதிக்கவில்லையென்றும் ஒப்புக்கொள்வோம் த்ரௌ பதியைக் காட்டிலும் அவர்கள் மிகவும் உத்துங்காதிகாரிகள் என்பதை மறுப்போமல்லோம். காகம், காளியன், கஜேந்திராழ்வான், விபீஷ ணாழ்வான், இளையபெருமாள் ஆகிய இவர்களையெல்லாம் பிள்ளை லோகாசார்யர் ஒரே சூர்ணையில் ஒரே ச்ரேணியில் எடுத்துக்காட்டி யுள்ளார்; இவர்கள் துல்யாதிகாரிகளாவென்பதை விமர்சிக்கவேணும். ப்ரபத்தாக்கள் என்னுமம்சத்திலே துல்யர்களாகக் கொள்ளப்பட் டிருக்கிறார்கள். அதில் என்ன குறை?

40. ஸ்ரீவசநபூஷணஸூக்தியும் முமுக்ஷுப்படி ஸூக்தியும் உண்மையில் பரஸ்பர விருத்தமாகத்தோன்றும்படியிருந்தால் மணவாள மாமுனிகளே விரோத சங்கையைக் கிளப்பிப் பரிஹார ப்ரகாரத்தைக் காட்டியிருப்பர். வியாக்கியானத்திற்கு இது முக்கியமான க்ருத்யம். வஸ்துத: இங்கு விரோத ப்ரஸக்தியே யில்லாமையினால்தான் மாமுனி கள் சங்காஸமாதானங்களில் ப்ரவர்த்திக்கவில்லை. ஆங்காங்கு விரோ தம் தோன்றுமிடங்களில் ப்ரஸங்கித்துப் பரிஹாரம் காட்டியருளியே யிருக்கிறாரென்பது வியாக்கியானங்களில் விசதம்.

41. வஸ்த்ரவ்ருத்தியை ப்ரபத்தியின் பலனாகச் சொல்லுவதும் திருநாமஸங்கீர்த்தனத்தின் பலனாகச்சொல்லுவதும் ஈஷத்தும் விருத்த மன்று. சூர்ப்பணகையின் அங்கபங்கம் இளையபெருமாள் செய்த

தென்பது நிர்விவாதமாயிருக்க, ஆழ்வார்கள் அது பெருமாள் செய்த தாகவே எங்குமருளிச்செய்திருப்பது ப்ரஸித்தம். இது உண்மையில் விருத்த வ்யாஹாரமே. ஒருவர் செய்த காரியத்தை மற்றொருவர் செய்த தாகச் சொல்லுவது ப்ராமாணிகர்களுக்குப் பொருந்தாதன்றோ. ஸ்வோக்திகளுக்குள்ளே பரஸ்பர விருத்தமாகப் பேசுவதும், ப்ரா மாணிக பரகீயோக்தி விருத்தமாகப் பேசுவதுமாகிய இரண்டும் தவறு தானே. இளையபெருமாள் செய்த காரியத்தைப் பெருமாள் செய்ததாக *மயர்வறமதிநல மருளப்பெற்றவர்கள் எப்படி யருளிச்செய்யலாமென் கிற சோத்யம் உண்டாகியே தீரும். இதற்குப் பரிஹாரம் அவசியம் செய்தேயாகவேண்டும். துடுப்பிருக்கக் கை வேகவேணுமோ? பூர்வா சாரியர்களே சங்கையைக் கிளப்பிப் பரிஹாரமும் செய்தருளியிருக்கிறார் கள். எவ்விதமாகப் பரிஹாரம் செய்தருளியிருக்கிறார்களென்னில்— சூர்ப்பணகைக்கு அங்கபங்கம் செய்தவர் இளையபெருமாளல்லர் என்று வது, பெருமாள் தாம் செய்தார் என்றுவது சொல்லிவிட முடியுமோ? ஒரு காலும் முடியாது. ஸ்ரீ ராமாயணம் ஆரண்ய காண்டம் பதினெட் டாம் ஸர்க்கத்தில் இளையபெருமாளே அங்க பங்கம் செய்ததாக ஸ்பஷ்ட மாகவன்றோவுள்ளது. அப்படியிருக்க, *சூர்ப்பணகாவைச் செவியொடு மூக்கு அவளார்க்க வரிந்தானைப் பாடிப்பற அயோத்திக்கரசனைப் பாடிப் பற *தங்கையை மூக்கும் தமையனைத் தலையும் தடிந்த வெந்தாசரதி* என்று பெரியாழ்வாரும், *இராக்கதிமூக்கு அரிந்திட்டவன் காண்மின் இன்றுய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே *தன்னை நயந்தாளைத் தான் முனிந்து மூக்கரிந்து* என்று திருமங்கையாழ்வாரும் எங்ஙனே ஸாதித்தார்களென்கிற விரோத சங்கையைப் பரிஹரித் தருளியிருக்கிற விதம் எது வென்னில்: கேண்மின். இளையபெருமாள் *ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:* என்னப்பட்ட வராகையாலே அவயவைக தேசம் செய்ததை அவயவிதானே செய்ததாகச் சொல்லுவதில் தவ றில்லை—என்றிவ்விதமாகப் பரிஹாரம் காட்டப்பட்டது. மற்றுமுண்டு.

42. இவ்விதமான சங்காபரிஹாரக்ரமம் ஸாமாந்ய மதிகளுக்கு ஸ்புரியாதாதலால் ஆசார்யர்கள் எடுத்துக்காட்டவேண்டியதாயிற்று. ப்ரக்ருத விவாத ஸ்தலத்தில் குருமுகமாகக் கேட்டவர்களுக்கு சங்கை யுதிக்க வழியே கிடையாது. உதித்தாலும், வஸ்த்ர வ்ருத்தியை ப்ரபத்தி யின் பலனைச் சொன்னாலென்ன? அதன் உள்ளீடான நாமஸங்கீர்த்த னத்தின் பலனைச் சொன்னாலென்ன? என்று புத்திமான்கள் தாங் களே ஸமாஹிதராவர்கள் என்று திருவுள்ளம் பற்றியே மண வாளமாமுனிகள் விரோதோத்பாவந தத்பரிஹாரங்களில் நேராகக் கைவைத்திலர்.

43. சந்திரனிடத்துள்ள களங்கத்தைப்பற்றி ஒரே கவியானவர் இரண்டு க்ரந்தங்களில் இரண்டு வகையாகப் பேசினார். *"ஏகோஹி தோஷோ குணஸந்நிபாதே நிமஜ்ஜதி இந்தோ: கிரணேஷ்விவாங்க:"*

என்று ஒரு க்ரந்தத்திலும் *"மலிநமபி ஹிமாம்சோர் லக்ஷ்ம லக்ஷ்மீம் தநோதி" *என்று மற்றொரு க்ரந்தத்திலும் சொல்லிவைத்தார். களங்கமானது பூர்ணிஷ்டங்களான சந்திரகிரணங்களில் இருப்பதே தெரியாமல் மறைந்து போகிறது என்று முந்தின க்ரந்தத்தின் தாற்பரியம். களங்கமானது சந்திரனுக்கு விசேஷசோபையைத் தருகின்றதென்று பிந்தின க்ரந்தத்தின் தாற்பரியம். இவை ஒன்றோடொன்று முரண்பட்டவையே. அஸத்கல்பமாவதும் அழகு கொடுப்பதாவதும் ஒன்றன்றே. இவற்றை ஸமந்வயப்படுத்தி ஒரு வியாஸமெழுதினால் ரஸிகர்கள் களிக்க ப்ராப்தமாகும். எதுவும் நமது நூல்களில் விசதமாகக் காணலாம்.

44. முமுக்ஷுப்படியில் முதலில் "மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்குள்ளீடான வஸ்துவிலும் மந்த்ரப்ரதனை ஆசார்யன் பக்கலிலும் ப்ரேமம் கனக்கவுண்டானால் கார்யகரமாவது" என்றருளிச்செய்து வைத்து, மேலே "சொல்லும் க்ரம மொழியச் சொன்னாலும் தன்ஸ்வரூபம் கெட நில்லாது" என்றருளிச் செய்கிறார்; முந்தின ஸ்ரீஸூக்தியில் நிர்ப்பந்த விசேஷம் காட்டப்பட்டது; பிந்தின ஸ்ரீஸூக்தியில் அஃதில்லாமை காட்டப்பட்டது. இவை பரஸ்பர விருத்தங்களல்லவா வென்று அல்பச்ருதர்கள் சங்கிப்பதுண்டு. இங்கே பரிஹாரமுணர்த்த வெழுந்தால் உபகரித்ததாகும்.

# ஐந்தாவது தரங்கம்—மிகத்தெளிவு பிறப்பித்தல்.

45. நாமஸங்கீர்த்தனமென்று தனிப்பட்ட ஒருபாயமுண்டென்றும், த்ரௌபதியிடத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்டது அதுவன்றென்றும் நாமெழுதியிருப்பது ஸாரமான விஷயம். அது மறுக்கவொண்ணாததே. ஆகவே 'த்ரௌபதியினுடைய ப்ரபத்தி நாமஸங்கீர்த்தனத்தினால் பழுதாய்விட்டது' என்கிற வாதம் சிறிதும் விலை செல்லாது ஆசார்ய கோஷ்டியில் சேராத ஆதுநிகர்களின் பங்க்திகளைக் காட்டுவதனாலென்னாகும். ஆதுநிகர்களிலே அந்யதமரான நாமும் பரச்சத க்ரந்தங்களெழுதியிருக்கிறோம்; அவற்றுக்கு எவ்வளவு ப்ராமாண்யமுள்ளதென்பது உலகமறிந்ததே. ஆதுநிகர்களிலே சிலருடைய உக்திகளைக்கொண்டு உண்மை காணப்புக்கால் நம்முடைய உக்திகளையுங்கொண்டு உண்மை காணத் தட்டில்லையன்றோ. ப்ரபந்நனுக்கு விஹித விஷய நிவ்ருத்தி தன்னேற்றமென்ற ஸ்ரீவசநபூஷண திவ்ய ஸூக்தி விமர்சத்திலிழிந்த ஒரு மஹான் "விஹித விஷய நிவ்ருத்தியின்றிக்கே மக்களைப் பெற்ற மஹாசார்யர்களுமுண்டே; அவர்களுக்கு என்ன கதி?" என்று கேட்டுக்கொண்டு "கதிசூந்யதைவ கதி:" என்று எழுதிவைத்துப்போனார். இங்ஙனே ப்ரதிபந்நத்தை யெழுதிப் போருமவர்களான ஆதுநிகர்களின் உக்திகளுக்கு எவ்வளவு கௌரவமளிக்கத் தகுமென்பதை ஆழ்ந்து ஆராய்ந்து அறிவது நலம்.

46. "த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்" என்கிற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்திக்கு—த்ரௌபதி ப்ரபத்தியினால் பெற விரும்பிய பலன் வஸ்த்ரம்—என்றுதான் பொருள் என்று ஸ்தாபிப்பதனால் ஒரு ஸம்ஹிதமும் ஸித்தியாது. "கஜேந்திராழ்வான் ப்ரபத்தியினால் பெற விரும்பிய பலன் கைங்கர்யம்" என்று அருளிச்செய்யப்பட்டிருந்தால் அதுகொண்டு கஜேந்திராழ்வான் கைங்கர்ய ரூப பலனை ப்ரபத்தியால் பெறவில்லையென்று தேறிவிடுமோ? அது ப்ரமாணாந்தராவஸேயம். கஜேந்த்ரன் ப்ரபத்தியினால் பலன் பெற்றானென்பது எப்படி ப்ரமாண ப்ரதிபந்நமோ, அப்படியே த்ரௌபதியும் ப்ரபத்தியினால் பலன் பெற்றாளென்பது ப்ரமாணப்ரதிபந்நமே. அவள் ப்ரபத்தியினால் பலன் பெறவில்லையென்பது பிள்ளைலோகாசார்யர் திருவுள்ளமாகில் ஸ்ரீவசந பூஷணத்தில் அந்த ப்ரகரணத்தில் அவளை ப்ரஸ்தாவித்தே யிருக்க மாட்டார். மேலே 'உபாயத்துக்குப் பிராட்டியையும் த்ரௌபதியையும் ..............போலேயிருக்கவேணும்............த்ரௌபதி லஜ்ஜையை விட்டாள்." என்கிற ஸ்ரீஸூக்தியையும் சேர்த்து ஆராய்ந்தால் அழகிய தெளிவு பிறக்கும்.

47. "பெருமாளுக்குப் பலம் ஸமுத்ரதரணம்" என்கிற ஸ்ரீஸூக்தியில் 'பெருமாள் ப்ரபத்தியினால் பெற்றது ஸமுத்ரதரணம்' என்கிற அர்த்தம் கிடைக்கமாட்டாமையில்லை. தாராளமாகக்கிடைக்கும். ப்ரமாணயுக்தாலே அந்த அர்த்தம் த்யஜிக்கப்படுகிறதத்தனை. அங்ஙனே த்ரௌபதிவிஷயத்தில் காட்டலாவதொரு ப்ரமாணயுக்தியில்லாமையுணர்க. "த்ரௌபதி ப்ரபத்தியினால் பெற்றபலன் வஸ்த்ரம்" என்று மணவாள மாமுனிகள் திருவுள்ளம் பற்றவில்லை யென்பது ஏற்றுக் கொள்ளத் தக்கதேயன்று. மூலகாரரான பிள்ளைலோகாசார்யருடைய திருவுள்ளத் திற்கு முரணாக மாமுனிகள் ஒருகாலும் திருவுள்ளம் பற்றமாட்டார். த்ரௌபதி ப்ரபத்தியினால் பலன் பெறாத பக்ஷத்தில் ப்ரபத்தி ஸகல பல ஸாதகமென்று நிரூபிக்கப் புகுந்தவிடத்திலே அவளை நிர்தேசித் தருளினது அஸமஞ்ஜஸமேயாகும். த்ரௌபதி செய்தது ப்ரபத்தி யென்கிற ஒரு கார்யமே. அவள் பலன் பெற்றது அபலபிக்கமுடியாத படி நாடுநகரமும் நன்கறிந்திருக்கிறது. அந்த பலன் அதற்கன்று, இதற்குத்தான் என்பது அஸாதுவார்த்தைகளில் தலையானது.

48. "அர்ஜுநனுக்கு தூத்ய ஸாரத்யங்கள் பண்ணிற்றும் ப்ரபத்த்யுபதேசம் பண்ணிற்றும் இவளுக்காக" [ஸ்ரீவசந-22·] என்ற விடத்தில் ஒரு ஸ்வோக்தி விரோதம் சங்கிக்க நேர்ந்தது; கண்ணபிரான் அர்ஜுநரக்ஷணம் பண்ணினது அவனுடைய தோஷங்களைப் பச்சை யாகக்கொண்டு—என்று நிரூபணம் செய்து கொண்டு வந்தவிடத்தில் த்ரௌபதிக்காகத்தான் அவனை ரக்ஷித்தருளிற்று என்கிற வார்த்தை பொருந்ாதன்றே. ஸ்வகீய வாத்ஸல்யத்தாலே ரக்ஷித்ததாகச்சொல்லி

முடித்தவுடனே த்ரௌபதிக்காகத்தான் ரக்ஷித்ததென்று சொல்லுவது வ்யாஹதந்தானே. மணவாளமாமுனிகள் இந்த வயாஹதியை உத்பாவநம் பண்ணி எவ்வளவு அழகாக நிர்வஹித்தருளுகிறாரென்பதை கண்ணுடையார் காணவேணும். அவ்விடத்து ஸ்ரீஸூக்திகளிவை- “ஸாரத்யம் பண்ணிற்றும் ப்ரபத்த்யுபதேசம் பண்ணிற்றுமிவளுக்காகவாகில் இவன் தோஷத்தைப் பச்சையாகக்கொண்டு அங்கீகரித்தானென்னுமது கூடாதேயென்னில்; அதுக்குக் குறையில்லை. இவள் கார்யார்த்தமாக இவனைக் குறித்து இவையெல்லாம் செய்கிறவிடத்தில் இவன் தோஷங்களைப் பார்த்து முகம் சுளியாமல் உகப்போடே செய்கையாலே.” என்று. இப்படிப்பட்ட ஸமந்வயம் மாமுனிகள் தவிர வேறொருவருடைய மதிக்கு கோசரமாகுமோ? மேலே காட்டின ஸமந்வய ப்ரகாரம் எப்படிப்பட்டதென்னில், அதை நாம் விவரிக்கவேணுமோ? த்ரௌபதிக்காகவே கார்யம்செய்தது என்றதற்கும் குறை கூறாமல், தோஷங்களைப் பச்சையாகக்கொண்டு செய்தது என்றதற்கும் குறை கூறாமல் இரண்டையுமொன்றேயாக்கி ஒழுங்குபடுத்தியிருப்பது மற்றும் பலவிடங்களுக்கு வழிகாட்டியாகக் கொள்ளத்தக்கது. ப்ரபத்தியினால் பலன் பெற்றாளென்றதற்கும் குறையில்லை; திருநாமம் பலனளித்தது என்றதற்கும் குறையில்லை என்பதன்றோ ஸூசித ஸமஞ்ஜஸ ஸமந்வயமாகும். ப்ரபத்தி நிஷ்பலம் என்று நிரூபிப்பதற்காகவா திவ்யசாஸ்த்ரமவதரித்தது?

49. த்ரௌபதியின் ப்ரபத்தி விபலமாயிற்றென்பதைப் பிள்ளை லோகாசார்யர் காட்டியருளத் திருவுள்ளம்பற்றியிருந்தாராகில் (மேலே 145.) “ஸ்ரீபரதாழ்வானுக்கு நன்மைதானே தீமையாயிற்று; ஸ்ரீகுஹப்பெருமாளுக்குத் தீமைதானே நன்மையாயிற்று” என்றருளிச்செய்த கட்டளையிலே த்ரௌபதியையும் பற்றி ஒருவாறு அருளிச்செய்திருப்பரேயல்லது, இப்படி ஒருகாலுமருளிச் செய்திரார் என்பது க்ராந்தி கசைலீவிவேசந குசலர்களுக்கே நிலமாகக்கூடியது.

50. “த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே—என்ற விடத்திற்கு வியாக்கியான மருளிச் செய்யாநின்ற மணவாளமாமுனிகள் “ரக்ஷ மாம் சரணாகதாமென்று சரணம்புகுந்த த்ரௌபதிக்கு” என்றருளிச் செய்திருப்பதை உற்றுநோக்கவேணும்: அநபேக்ஷிதமாக ஓரக்ஷரமும் எழுதியருளத் திருவுள்ளம் பற்றாதவரான மாமுனிகள் ‘சரணம் புகுந்த த்ரௌபதிக்கு’ என்றெழுதியருளினதானது அக்காலத்திலேயே சில அல்பச்ருதர்கள் ஸ்ரீவசநபூஷண ஸூக்திக்கும் முமுக்ஷுப்படி ஸூக்திக்கும் பரஸ்பரவிரோத சங்கை செய்துகொண்டிருக்க, அது ஸுதராம் அஸ்தாநே என்று காட்டியருள்வதற்காகவே யென்று பெரியார் பகர்வர்” என்று (ஆரம்பத்தில்) எழுதியிருக்கிறோம்; அதைப்பற்றி இங்கு விவரிக்கப்ராப்தமாகிறது. “த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே” என்கிற ஸ்ரீ

ஸூக்திக்கு வியாக்கியானம் செய்தருளுமிடத்து—" மஹாஸதஸ்ஸிலே துச்சாஸநன் வஸ்த்ராபஹாரம் பண்ணுகிறபோது அவ்வாபத்திலே க்ருஷ்ணன் தூரஸ்தனுயிருக்கச் செய்தேயும் த்ரௌபதிக்கு வஸ்த்ரத்தை வர்த்திப்பித்துக்கொடுத்தது திருநாமமிறே" என்றிவ்வளவே அருளிச்செய்யவேண்டியிருக்க, "சரணுகதாமென்று சரணம்புகுந்த த்ரௌபதிக்கு" என்றருளிச் செய்திருப்பதானது, த்ரௌபதியானவள் சரணுகதியிலே ஊன்றினவளேயொழிய நாமஸங்கீர்த்தனமாகிற தனிப்பட்ட வுபாயத்திலே ஊன்றினவளல்லள் என்பதைக்காட்டுதற்காகவே. ப்ரபத்தியின் உள்ளீடான நாமஸங்கீர்த்தனத்தினுல் பெற்றதாகச் சொல்லப்பட்ட பேறு ப்ரபத்தியினுடையதே யென்பது ஸுவ்யக்தமாகக் காட்டப்பட்டதாயிற்று. இங்ஙனன்றிக்கே, ப்ரபத்திபண்ணின த்ரௌபதிக்கு ப்ரபத்தியினுல் பலன் ஸித்திக்கவில்லையென்றும் நாமஸங்கீர்த்தனத்தினுல்தான் அது ஸித்தித்ததென்றும் காட்டுவதுதான் மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திக்கு லக்ஷ்யம் என்னில், அப்போது மாமுனிகள் மஹாபாரதவிருத்தமாகத் திருவுள்ளம் பற்றினுரென்று தான் சொல்லநேரும். இப்படிப்பட்ட அவத்யத்தை மாமுனிகள் ஒருகாலும் ஸஹியார்.

51. த்ரௌபதி ப்ரபத்திபண்ணினபோது எவ்விதமான பலனை அவள் உத்தேசித்தாளென்னும் விஷயத்தை முக்கியமாக நாம் ஆராயவேண்டும். வஸ்த்ரம் வளர்ந்து செல்லவேணுமென்று இதைத்தான் அவள் உத்தேசித்தாளென்று சொல்லுவது பொருந்தாது. இப்படி ஒரு காரியம் உண்டென்பது அவளுடைய புத்திக்கு எட்டியிருக்க ப்ரஸக்தியேயில்லை. கண்ணபிரான் தன்னுடைய விலக்ஷண சக்தியோகத்தாலே புடவை சுரக்கப் பண்ணினுனத்தனையல்லது, இங்ஙனேயாகவேணுமென்று அவள் கோரியிருந்தாளல்லள். மானபங்கமாகாமே நோக்கியருளவேணுமென்னுமித்தனையேகருதி ப்ரபத்திபண்ணினுள். "த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்" என்று பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்ததும் "வஸ்த்ரார்த்தமாக" என்று மணவாளமாமுனிகளருளிச்செய்ததும், நிகழ்ந்த வரலாற்றைத் தெரிவித்த மஹாபாரதத்தை யடியொற்றியேயாம். மறுபடியும் விவரிக்கிறேம்—த்ரௌபதி வஸ்த்ரவ்ருத்தியை விரும்பினுளென்று நினைக்கவேண்டா. ப்ரஹ்லாதாழ்வான் தூணிலிருந்து ஒரு நரசிங்கம் தோன்றவேணுமென்ருவது தோன்றப் போகிறதென்ருவது நினைத்தவனேயல்லன். கஜேந்திராழ்வான், *தேவீஹஸ்தாம் புஜேப்ய:* என்று தொடங்கி பட்டர் நான்கு ச்லோகங்களினுலருளிச்செய்கிற கோலாஹலத்தோடே எம்பெருமான்மடுவின் கரையேற வரப்போகிருனென்ருவது, "பாதம் பராமம்ருசுஷோபிச கா மநீஷா" என்று ஆழ்வானருளிச்செய்தபடி (ஆனைக்காலென்று உலகர் பழிக்கநின்ற) தன் காலைத் தடவிக்கொடுக்கப் போகிருனென்ருவது நினைத்திருந்தவனல்லன். பாதுகாபட்டாபிஷேகமொன்று

நடக்கப்போகிறதென்று பரதாழ்வானும் நினைத்தவனல்லன், ஒருவருமே நினைத்திருந்ததில்லை. அவரவர்கள் தங்கள் ரக்ஷணத்தை ஸாமான்யமாகக் கோலுமவர்களேயல்லது இன்னபடி யின்னபடி செய்தருளி ரக்ஷிக்கவேணுமென்று எம்பெருமானுக்கு வழிகாட்டுகிறவர்களல்லர். "ரக்ஷமாம் சரணாகதாம்" என்றும் ", இமாமவஸ்தாம் ஸம்ப்ராப்தாம் அநாதாம் கிமுபேக்ஷஸே" என்றும் சொன்ன த்ரௌபதிக்கு ஒருபடி தன்னை மஹத்தான ஆபத்தில் நின்றும் ரக்ஷித்தருளவேணுமென்பது தவிர வஸ்த்ரவ்ருத்தியைச் செய்வித்து ரக்ஷிக்கவேணுமென்று நெஞ்சில் ஒரு மூலையிலும் நினைக்கப்பட்டிருக்கவில்லை.

52. வஸ்துஸ்திதி இப்படியிருக்க, "த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்" என்கிற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்திக்குச் சிலர் நிர்ப்பந்தித்துக்கூறும் பொருள் [எங்ஙனே சேரும்! ஒருபடியாலும் சேராது. அவள் 'எனக்கு வஸ்த்ர விவ்ருத்தியைப் பண்ணித்தரவேணும்' என்று அபேக்ஷித்தாள் என்று சொல்லுகிற வார்த்தையானது மஹாபாரதம் நடையாடுமிடத்திலே விலை செல்லக்கூடியதன்று. ப்ரக்ருத விசாரத்தில் இஃதொன்றுதான் தலையான விஷயம். த்ரௌபதி அபேக்ஷித்தது என்ன? என்பதை விசாரித்து நிர்ணயிப்பதே. அவள் வஸ்த்ரார்த்தமாக ப்ரபத்தி பண்ணினாளென்கிற பூருவர்களின் வார்த்தைக்கு "எனக்கு வஸ்த்ரத்தை வளரச் செய்யவேணுமென்று ப்ரபத்தி பண்ணினாள்" என்று பொருள் கொள்ளுவது ஒருபடியாலும் பொருந்தாதென்பதைப் பலதடவை கூறினாலும் புநருக்தியாகாது. அப்படி சரித்திரம் சொல்லப்பட்டிருக்கவில்லை. அது ஸம்பாவிதமுமன்று. வஸ்த்ரவ்ருத்தி பலனாகக் கிடைத்த கதையைக் கொண்டே வஸ்த்ரார்த்தமென்று ஆசார்யர்களருளிச் செய்தார்களத்தனை. கிம் பஹுநா! அவள் எதையபேக்ஷித்தாளோ அது ஸித்தித்துவிட்டதென்பதிலும், அது நாமோச்சாரண ஸஹித ப்ரபத்தியினால்தான் ஸித்தித்ததென்பதிலும் ப்ராமாணிகர்கள் விஸம்வாதப்படமாட்டார்கள்.

## ஆறுவது தரங்கம்—அஸங்கதோக்தி நிரஸநம்.

53. த்ரௌபதி கதறின காலத்திலே கண்ணபிரான் நேரில் எழுந்தருளாமைக்குச் சிலர் கூறும் காரணம் மஹாபாரத விருத்தம். அந்த ஸமயத்திலே ருக்மிணிப் பிராட்டியானவள் கண்ணனைப் பஞ்சசயனத்தின்மேலேற்றிக் கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பனைக்கிப் போகமயக்குக்களாலே மயங்கப்பண்ணி விட்டாளென்றன்றோ பிறர் சொல்லுவதும் எழுதுவதும். இது மஹாபாரத விருத்தம். மஹாபாரதே வநபர்வணி பன்னிரண்டாமத்யாயத்தில்—வநவாஸம் செய்கின்ற பாண்டவர்களிடத்துக் கண்ணபிரானெழுந்தருளின வரலாறு கூறப்பட்டிருக்கிறது. (ச்லோ. 51.) *பாஞ்சாலீ புண்டரீகாக்ஷம் ஆஸீநம்

யாதவைஸ் ஸஹ, அபிகம்யாப்ரவீத் க்ருஷ்ண சரண்யம் சரணைஷிணீ* என்று தொடங்கிக் கண்ணபிரானை நோக்கி த்ரௌபதி முறையிட்ட முறையீடு கள் வெகு விரிவாக வருணிக்கப்பட்டிருக்கின்றன. அப்போது கண்ண பிரான் த்ரௌபதியை ஆச்வாஸப்படுத்திவிட்டு. (அத்யாயம் 13ல் தரும புத்திரரை நோக்கி "नैतत्कृच्छ्रमनुप्राप्तो भवान् स्याद्वसुधाधिप । यद्यहं द्वारकायां स्यां राजन् सन्निहित: पुरा ॥ आगच्छेयमहं द्यूतमनाहूतोऽपि कौरवै: ।....वारयेयमहं द्यूत बहून् दोषान् प्रदर्शयन् ॥" இத்யாதிகள் கூறியுள்ளான். அதாவது, நீங்கள் இப் படிப்பட்ட கஷ்டத்தை யடைந்த காலத்தில் நான் த்வாரகையில் இருக்கவில்லை. அங்கு இருந்தேனுகில் இப்படிப்பட்ட கஷ்டம் உங்க ளுக்கு நேர்ந்தே யிராது. என்னையழையாமலிருந்தாலும் நானாகவே அங்கு வந்து சூதாட்டமே நடவாதபடி தடுத்திருப்பேன்.......என்றான். பிறகு (அத்யாயம் 14ல்) கண்ணனை நோக்கி தருமபுத்திரர் கேட்கிறார்— "असान्निध्यं कथं कृष्ण ! तवासीत् वृष्णिनन्दन । क्वचासीद्विप्रवासस्ते किं चाकार्षी: प्रवासत: ॥" கண்ணு! நாங்கள் கஷ்டப்பட்ட காலத்தில் நீ த்வாரகையில் இருக்கவில்லை யென்கிறுயே; அப்போது எங்கே வெளியேறியிருந்தாய்? என்ன காரியத்திற்காக வெளியேறியிருந்தாய்? இதைச்சொல்லவேணு மென்றார். அதற்குக் கண்ணபிரான் "साल्वस्य नगरं सौभं गतोऽहं भरतर्षभ । निहन्तुं कौरवश्रेष्ठ ! तत्र मे शृणु कारणम् ॥" என்று தொடங்கி ஸால்வவதத்திற் காகத் தான் தேசாந்தரம் சென்றிருந்த வரலாற்றை விரிவாக வுரைத் திருக்கிறான். இதிஹாஸதத்துவம் இங்ஙனேயிருக்க, த்ரௌபதி கதறின போது க்ருஷ்ணபகவான் த்வாரகையிலே யிருந்ததாகவும், எழுந்துவர வொட்டாதபடி ருக்மிணிப்பிராட்டி லீலாரஸவிசேஷங்களாலே தடுத்து விட்டதாகவும் சிலர் சொல்லுவது மெழுதுவதும் பொருந்துமாவென் பதை ப்ராமாணிகர்கள் பரிசீலிக்கவேணும்.

54. விச்வகுணதர்சத்தில் கச்சியுலகளந்த பெருமாள் ஸன் னிதியை வருணிக்கின்ற விச்வாவஸு "ரவிக்ரமாசுத்வ நிஷேதி கோபுரம் த்ரிவிக்ரமஸ்யாயதநம் நிசாம்யதாம்." என்றான்; அதாவது ஸூர்யன் ஆகாசத்தில் விரைந்து செல்வதைத் தடைசெய்கின்ற கோபு ரத்தையுடைய உலகளந்த பெருமாள் ஸன்னிதியைக் காணாய் என்கை அடியோடு கோபுரமேயில்லாத பச்சை வண்ணர் ஸன்னிதியைப்பற்றி இங்ஙனே வருணியாமல் சிறிது உயரமுள்ள கோபுரத்தோடு கூடிய உலகளந்தான் ஸன்னிதியைப்பற்றி வருணித்ததில் பாதகமொன்று மில்லையென்று பெரியார் கூறுவர். த்ரௌபதி கதறினபோது கண் ணன் த்வாரகையில் இருந்தாலாவது ருக்மிணிப்பிராட்டி கண்ணனை யெழுந்து போகவொட்டாமல் தடுத்து விட்டாள் என்கிற பேச்சு ஒரு வாறு பொருந்துமென்னலாம். பொருந்துவதற்கு அணுமாத்ரமும்

ப்ரஸக்தியில்லாத விஷயமன்றோவிது. ஸ்ரீவசநபூஷணஸூக்திக்கும் முமுக்ஷுப்படி ஸூக்திக்கும் விரோதகந்தமுமில்லாதிருக்க விரோத மென்று கொண்டு பரிஹாரம் செய்வது ஸமஞ்ஜஸமன்று என்றே ஸகல ப்ராஜ்ஞர்களும் ஸமகண்டமாகச் சொல்லுவது. சக்ரவர்த்தி திருமகன் திருவயோத்தியில் திருவவதரித்ததாக ஒரு நூலிலும், கோஸல நாட்டில் திருவவதரித்ததாக மற்றொரு நூலிலும் எழுதப்பட்டிருந்தால் இங்கு விரோத சங்கை பண்ணி விரோத பரிஹாரம் செய்ய ஆவச்யகதை யுண்டோ? "எல்லா ப்ரமாணங்களிலும் தேஹத்தாலே பேறென்கிறது; திருமந்த்ரத்தில் ஆத்மாவாலே பேறென்கிறது; சரமச்லோகத்தில் ஈச்வரனாலே பேறென்கிறது; த்வயத்தில் பெரிய பிராட்டியாராலே பேறென்கிறது" என்கிற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியின்மேல் ப்ரபலமான விரோத பரிஹாரம் அவதரிக்கவேணுமே; ஸகல சாஸ்த்ரங்களும் ஏகவிஷயகங்களாயிருக்க, ஒன்றுக்கு தேஹத்தாலே பேறென்கையிலே நோக்கென்றும், மற்றொன்றுக்கு ஆத்மாவாலே பேறென்கையிலே நோக்கென்றும், வேறொன்றுக்கு ஈச்வரனாலே பேறென்கையிலே நோக்கென்றும், இன்னொன்றுக்குப் பெரிய பிராட்டியாராலே பேறென்கையிலே நோக்கென்றும் பிள்ளை லோகாசார்யர் ஸாதிக்கிறாரே, இவை பரஸ்பர விருத்தங்களல்லவா? இந்த விரோதத்தை ப்ரபலப்படுத்திப் பேசுகிறவர்கள் எங்கும் மலிந்துள்ளார்கள். இவற்றை நோக்கி விரோத பரிஹாரமவதரித்தால் மஹோபகாரமாகும்.

55. ஸ்ரீவசநபூஷணஸூக்திக்கும் முமுக்ஷுப்படி ஸூக்திக்கும் விரோதலேசமுமில்லை. சங்காப்ரஸக்தியுமில்லை யென்பதே பரமார்த்தம். பிள்ளைலோகாசார்யருடைய திருவுள்ளத்தால் த்ரௌபதியின் ப்ரபத்தி நிஷ்ப்பலமென்று தேறுமாகில் ஸ்ரீவசநபூஷணத்தில் "த்ரௌபதி ஸ்நாதையாயன்றே ப்ரபத்தி பண்ணிற்று" என்கிற ஸ்ரீஸூக்தி புக ப்ரஸக்தியேயில்லையாகும். த்ரௌபதி ரஜஸ்வலையாயிருந்து ப்ரபத்தி பண்ணினபடியால்தான் அது பலிக்கவில்லையென்றும், ஆகவே ப்ரபத்திக்கு ப்ரகார நியதி அவச்யமுண்டென்றும், ப்ரகார நியதியில்லையென்று பிள்ளைலோகாசார்யரருளிச் செய்தது பிசகென்றும் ப்ரத்யவஸ்தானமுண்டாகுமாகில் அதை மறுக்க வழியேயில்லையாகும். வழியுண்டென்னில் காட்டியருளலாம்.

## ஏழாவது தரங்கம்

### த்ரௌபதியும் கஜேந்த்ராழ்வானும்

56. நாம் ஆதரிக்கும் இதிஹாஸபுராணங்களில், எம்பெருமானைக் குறித்து ப்ரபத்திபண்ணிப் பேறுபெற்றவர்கள் எண்ணிறந்தவர்கள் கூறப்பட்டுள்ளார்கள். அவர்களுள் த்ரௌபதியையும் கஜேந்திராழ்வானையும் பற்றி முக்கியமாக விமர்சம் செய்யவேண்டும். இவ்விருவரும் மஹத்தான ஆபத்தையடைந்திருந்து சிறிதுகாலம் ஸ்வயத்நத்

தாலே அந்த ஆபத்தைப் போக்கிக்கொள்ள முயன்று, அந்த முயற்சி பழுதுபடவே ப்ரபத்தியைப்பண்ணி ஆபத்து தீரப் பெற்றவர்களென்பது யாவருமறிந்த விஷயம். கஜேந்த்ராழ்வானுடைய ஆபத்து 'பரமாபத்து' என்று சொல்லப்படுகிறது. [*ஸ து நாகவர: ஸ்ரீமாந்—பரமாபதமாபந்ந:* என்றதை நினைப்பது.] த்ரௌபதியினுடைய ஆபத்து 'மஹாத்தான ஆபத்து' என்று சொல்லப்படுகிறது. [*மஹத்யாபதி ஸம்ப்ராப்தே* என்றதை நினைப்பது.] இப்படிப்பட்ட ஆபத்துக்கள் ப்ரபத்தியினால் தீர்ந்தனவென்று பௌராணிகர்கள் நம்பியிருக்கிறார்கள். இவ்விருவர்க்கும் ஆபத்தைப் போக்கி ரக்ஷணம் செய்தருளினவன் எம்பெருமானேயாவன். 'ரக்ஷணம் செய்தவன் எம்பெருமானல்லன்; ப்ரபத்தியே' என்று சொன்னாலும் 'நாமஸங்கீர்த்தனமே' என்று சொன்னாலும் இதில் சமத்காராதிசயம் அநுபவிக்கத்தக்கதேயொழிய அர்த்தத்தில் விசேஷமொன்றும் காணலாகாது. *யானுமென்னெஞ்சுமிசைந்தொழிந்தோம் * நெஞ்சமே! நல்லைநல்லை உன்னைப் பெற்றாலென் செய்யோம் *ஊனில்வாழுயிரே! நல்லைபோ வுன்னைப்பெற்று* என்னுமாழ்வார் பாசுரங்களில் ஆழ்வார், தம்மையும் தமது திருவுள்ளத்தையும் வேறுபடுத்திப்பேசியிருப்பதுபோல, எம்பெருமானையும் ப்ரபத்தி நாமஸங்கீர்த்தனாதிகளையும் வேறுபடுத்திப் பேசியிருப்பதுண்டு; உண்மையில் அங்கு வேறுபாடு கிடையாதென்றும், ஒருவகையான சுவையின்பம் நுகரத்தக்கதென்றும் நுண்ணிதினுணர்வர் நுண்மதியோர். அந்த விஷயம் எப்படியாவதிருக்கட்டும்; அதில் விவேகிகளுக்கு விவாதம் வளராது. த்ரௌபதிக்குச் செய்த ரக்ஷணத்திலும் கஜேந்திராழ்வானுக்குச்செய்த ரக்ஷணத்திலும் வாசியுண்டா? இல்லையா? என்பதில் விசாரம். இருவரும் ரக்ஷணம் பெற்றார்களான பின்பு இதில் வாசி என்ன விருக்கிறது என்பர் சிலர்; நெடுவாசியுண்டென்பர் நிபுணநிரூபகர்கள். அந்தவாசி இருக்கும்படி என்னென்னில்; கஜேந்திராழ்வானுடைய ரக்ஷணத்தை அரைகுலையத்தலைகுலைய நேராக ஓடிவந்து மடுவின் கரையிலே விழுந்து செய்திருக்கிறானெம்பெருமான்; த்ரௌபதியின் ரக்ஷணத்தையோவென்னில்; அங்ஙனமன்றிக்கே முகந்தோற்றாமே மறைய நின்று செய்திருக்கிறான். இந்த நெடுவாசி உலகமறிந்ததே. இதை யாரும் அபலபிக்கமுடியாது.

57. இங்ஙனே வாசிபடக் காரியம் செய்வானேன்? இருவர்க்கும் துல்யமாகவே செய்திருக்கலாமே. கஜேந்திராழ்வானுக்குப் போல த்ரௌபதிக்கும் நேராக வந்து ரக்ஷணம் செய்திருக்கலாம்; அல்லது த்ரௌபதிக்குப் போல கஜேந்திராழ்வானுக்கும் முகம் தோற்றாமே நின்று காரியம் செய்திருக்கலாம். ஒருவர்க்கு நேராக ஓடிவந்து காரியம் செய்வதும், மற்றொருத்திக்கு நேரிட வராமற்போவதுமான இந்த விஷமச் செயலை எம்பெருமான் ஏதுக்குச் செய்ய வேண்டுமென்று ஆராய்ச்சி பண்ணப்ராப்தம். புராணகதைகள் நடந்தது நடந்தபடியே

நாம் சொல்லிப் போக வேணுமே யொழிய இவற்றில் ஆராய்ச்சி ஏதுக்கு? என்று சிலர் சொல்லிப் போவதுண்டு. ஔசித்யமறிந்து எம்பெருமான் செய்தருளி யிருக்கிற ஒவ்வொரு செய்தியையும் ஊன்றி நோக்கினால் வெகு ஆச்சர்ய முண்டாகும். ஒருவர்க்குக் காரியம் செய்யாமலே போவது, ஒருவர்க்கு நேரேவந்து காரியம் செய்வது, வேறொருவர்க்கு மறைந்து நின்று செய்வது......ஆகிய இப்படிப்பட்ட வாசிகள் வெறுமனே காண்பனவையல்ல. இவற்றில் சாஸ்த்ரார்த்த தத்துவங்கள் மிகமிகப் பொதிந்திருக்கும். மேலே ப்ரஸ்தாவிக்கப்பட்ட விஷயத்தில் ப்ரக்ருதம் ஆராய்ச்சி செய்வோம். கஜேந்திராழ்வானுடைய துக்கம் எப்படிப்பட்டதென்று எம்பெருமான் உள்ளபடி தெரிந்து கொண்டவனாதலால் அது ஸாக்ஷாத்தாகவே யெழுந்தருளித் தீர்க்கவேண்டிய துக்கமென்று கொண்டு பதறியோடிவந்து பொய்கைக் கரைசேர்ந்தான். இவ்விதமாகவே த்ரௌபதியின் துக்கத்தின் தன்மையையும் உள்ளபடி அவனறிந்தவனாதலால் அந்த துக்கத்தைப் போக்க நேராக வரவேண்டிய அவசியமில்லையென்று கொண்டு நேரிட வாராமலே காரியத்தைச் செய்து தலைக்கட்டினான்.

58. இனி இதை விவரிப்போம். *மீனமர்பொய்கை நாண்மலர் கொய்வான் வேட்கையினோடு சென்றிழிந்த வேழமானது முதலையின் வாய்ப்பட்டு அபரிமிதமான துக்க மடைந்ததாகவும், பிறகு ஆதிமூலமே யென்று ஓலமிட்டு துக்க நிவ்ருத்தியைப் பெற்றதாகவும் கூறப்படுகிறது. இங்கு துக்க நிவ்ருத்தியாவது என்ன? எந்த துக்கம் தீருவதற்காக கஜேந்திராழ்வான் கூவினான்? என்று பார்க்கவேணும். முதலைவாய்க் கோட்பட்டதுதான் துக்கம்; அது தீருவதற்காகத் தான் கூவினது— என்னும் பக்ஷத்தில் இதற்காக எம்பெருமான் நேராக ஓடி வரவேண்டிய அவசியம் இல்லையாகும். ஸகல ப்ரபஞ்சங்களினுடையவும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களையெல்லாம் அவலீலையாக நடத்திப் போருவதற்குக் கருவியா யிருக்கின்ற ஸங்கல்பம் எங்கே போய்விட்டது? அந்த ஸங்கல்பத்தைக் கொண்டே எளிதாக கஜேந்திர ரக்ஷணம் செய்திருக்கலாமே; இது தவிர, *விடுத்த திசைக்கருமம் திருத்தவல்ல திருவாழியாழ்வான் கைங்கரியத்திற்கு ஸஜ்ஜனாயிரா நின்றான்;* கருதுமிடம் பொருது கைந் நின்ற சக்கரத்தன்* (திருவாய்மொழி (10-6-8.) என்கிற படியே இன்ன திக்கில் இன்னகாரியமாகவேணு மென்று நினைத்தமாத்திரத்திலேயே அதை நிறைவேற்றவல்லவன் அவன். *கீழுலகில்அசுரர்களைக் கிழங்கிருந்து கிளராமே ஆழிவிடுத்தவருடைய கருவழித்த வழிப்பன்* என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடி பாதாள லோகத்திலுஞ் சென்று இறைப் பொழுதில் அரிய பெரியகாரியம் செய்துவந்த அந்த ஸுதர்சநாழ்வானுக்கு அஸாத்யமானதுண்டோ? பரமபதத்திலிருந்து பொய்கைக்கரைக்கு வந்துங்கூட *“க்ராஹம் சக்ரேண மாதவ:”* கைந்நாகத் திடர்கடிந்த கனலாழிப்படையுடையான்* குட்டத்துக் கோள் முதலை

துஞ்சக்குறித்தெறிந்த சக்கரத்தான்* ஆனையின் துயரம் தீரப்புள்ளூர்ந்து சென்று நின்றாழி தொட்டானை* இத்யாத்யநேகபிரமாணப்படியே அந்த ஸுதர்சநாழ்வானையிட்டுத்தானே காரியம் செய்தது. பொய்கைக் கரையளவும் எழுந்தருளித்தான் அந்த ஸுதர்சநாழ்வானுக்கு நியமிக்க வேணுமோ; பரமபதத்திலிருந்தே நியமித்தாலாகாதோ? நியமிக்கத் தான் வேணுமோ? நினைவுபோதுமே.

59. ஆக, அப்ரதிஹதசக்திகமான ஸங்கல்பத்தைக் கொண்டும், "வாணீ பௌராணிகீ யம் ப்ரதயதி மஹிதம் ப்ரேக்ஷணம் கைடபாரே:" என்கிற ஸுதர்சநசதக ஸ்ரீ ஸூக்தியின்படி ஸங்கல்பபர்யாய பூதனை திருவாழி யாழ்வானைக் கொண்டும் எளிதாகச் செய்திருக்கக்கூடிய கஜேந்திரரக்ஷணத்தை எம்பெருமான் ஏன் அங்ஙனே எளிதாகச் செய்ய வில்லை? எதற்காக நேரில் ஓடி வந்தான்? என்கிற இந்த கேள்விக்குப் பரம த்ருப்திகரமான ஸமாதானம் சொல்லியே யாகவேண்டும். இந்த சிரமத்தை நாம் படவேண்டாதபடி பலவாயிரம் வருஷங்களுக்கு முன்பு திருவாய்மொழியில் நம்மாழ்வாரே அருளிச் செய்து வைத்தார்; *தோழுங் காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே * [3—1—9] என்கிற இப் பாட்டில் 'தொழுங்காதல்களிறு' என்ற சொல்தொடையே உயிரானது. கஜேந்திரனுக்கு முதலையைத்துணிக்கவேண்டுவதே உத்தேசியமாகில் அது ஸங்கல்பத்தினாலோ திருவாழியாழ்வானையனுப்பியோ செய்யப்பட்டேயிருக்கும். முதலையைத் துணித்தல் இங்கு உத்தேச்யமன்று. அப்போது எம்பெருமானை நோக்கி கஜேந்திராழ்வான் விண்ணப்பம் செய்கிறான்—* "நாஹம் கலேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந, கரஸ்தகமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் தவ" என்று. பெருமானே! இப்பாழுமுடலை முதலை தின்றுவிடுகிறதே யென்று இதற்காக நான் கரைந்திலேன்; கையிற்பறித்த பூக்களை உன் திருவடி வாரத்திலே நேராகப்பணிமாற வேணுமென்று இஃதொன்றையே ஆசைப்பட்டேன்; *உள்ளுவாருள்ளிற்றெல்லா முடனிருந்து அறியுமவனான நீ இத்தகைய என்னாசையைத் தெரிந்துகொண்டு நேரில் எழுந்தருளினையே!, ஹா ஹா! உன்னுடைய ஸர்வஜ்ஞதையும் கருணையுமென்னே! என்று கஜேந்திரன் வியந்து உகந்து விஜ்ஞாபித்திருக்கின்றான். இப்படிப்பட்ட ஆசையை எம்பெருமான் நிறைவேற்றுவதற்காகவே அரைகுலையத் தலைகுலைய மடுவின் கரையிலே வந்து விழுந்தான். முதலையை முடித்தலென்பது இங்கு ப்ரதாநமன்று. கதைகேட்க ருசியுடையார்க்கு அது சொல்லப்படுகிறது; தத்வஜிஜ்ஞாஸுக்கள் யாரோ சிலரேயிருப்பர்களாதலால் அவர்களுக்குமட்டும் அருமருந்தாக தத்வார்த்தம் மூலே முடுக்குகளில் வெளியிடப்படுகிறது. ஸ்ரீவசநபூஷணத்தில் ப்ரபத்தியின் பலநியமமில்லாமையை உபபாதிக்கும் சூர்ணையிலே "காகத்துக்கும் காளியனுக்கும் பலன் ப்ராணம்" என்றருளிச்செய்து, "கஜேந்த்ராழ்வானுக்குப் பலன் கைங்கர்யம்" என்

றருளிச்செய்தார். "காக காளிய கஜேந்த்ரர்களுக்குப் பலன் ப்ராணம்" என்று ஒரே வார்த்தையாக முடித்திருக்கலாம். அப்படியின்றிக்கே, காகமும் காளியனும் ப்ராணனையே பலனாகக் கொண்டவர்களென்றும் கஜேந்த்ராழ்வான் கைங்கர்யத்தையே பலனாகக்கொண்டவனென்றும் விசேஷம் காட்டியருளிச் செய்ததானது, இதுகாறும் நாம் விரிவாக வரைந்த விஷயங்களைத் திடப்படுத்தும்.

60. ஸ்வாமி ஸ்ரீபாஷ்யகாரர் * அந்தராதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் பரித்ராணாய ஸாதூநாமென்கிற கீதாச்லோகத்தை ப்ரஸக்தாநுப்ரஸக்தமாக உதாஹரித்து "साधुपरित्राणमेवोद्देश्यम् ; आनुषङ्गिकस्तु दुष्कृतां विनाशः ; संकल्पमात्रेणापि तदुपपत्तेः" என்றருளிச்செய்திருப்பது ப்ரஸித்தம். ஸாதுபரித்ராணம் மட்டும் ஏன் ஸங்கல்ப ஸாத்யமாகாதென்று கேள்வி பிறக்குமே. அக்கேள்விக்கு ஸமாதானம் கீதாபாஷ்யே விசதீக்ருதம். இந்த ஸ்ரீஸூக்திகளை ஸ்வாமி அருளிச்செய்தது * மழுங்காத வைநுதிய * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தையே மூலமாகக்கொண்டு—என்பதை த்ரமிடோபநிஷத்ப்ரபாவ ஸர்வஸ்வத்திலே விரியவுரைத்தோம். முக்கியமாக ஸ்ரீகஜேந்திராழ்வான் சரிதையைத் திருவுள்ளம்பற்றியேயென்று உணர்க. கஜேந்திராழ்வானுடைய கூக்குரலைக்கேட்டு எம்பெருமான் விரைந்தெழுந்தருளினது முதலையைத் துணிக்கைக்காகவா? கைங்கரியம் கொள்ளுகைக்காகவா? என்னும் விசாரத்தில், கைங்கரியம் கொள்ளுகைக்காகவேயொழிய முதலையைத் துணிக்கைக்காகவன்று என்பது பக்தர்களால் மறக்கத்தக்கதன்று. ராவண ஸம்ஹாரத்திற்காக ஸ்ரீராமபிரான் திருவவதரித்தானென்று மேலெழச் சொல்லுமாபோலே முதலையைத்துணிக்க எழுந்தருளினனென்று சொல்லுவது முண்டு. அது ஸாமான்யமான உக்தியேயொழிய மர்ம ஸ்பர்சியான உக்தியன்று. ஆழ்வாரருளிச் செயல்களில் முதலையைத் துணிக்கைக்காக எழுந்தருளினதாகச் சொன்ன விடங்களையும் கைங்கரியங் கொள்ள வெழுந்தருளினதாகச் சொன்னவிடங்களையும் காண்கிறோம். ஆனால், முதலையைத் துணிக்கவெழுந்தருளினதாகச் சொன்ன பாசுரங்களே மிகையாகக் காணப்படும். கைங்கரியங்கொள்ள வெழுந்தருளினதாகச் சொன்ன பாசுரங்கள் "ஒரு வாரணம் பணி கொண்டவன் பொய்கையில்" [பெரியாழ். 4-2-5] என்றாற்போலே மிகச்சிலவே காணப்படும். ஆனாலும் ஆங்காங்கு வியாக்யானங்களில், கைங்கரியங்கொள்ள வெழுந்தருளினதையே ஆசாரியர்கள் விரித்துரைக்கக் காணாநின்றோம்.

61. சிறியதிருமடலில் "போரானைபொய்கைவாய்......நாராயணா ஓ! மணிவண்ணா நாகணையாய்! வாராய் என்னாரிடரை நீக்காய்" என்ற விடத்து வியாக்கியானம்—"[வாராய்] என்னுடைய ஆர்த்தி தீரும்படி அழகியவடிவைப் பாரித்துக்கொண்டு இங்ஙனே எழுந்தருளவேணும்;

[என்னுரிடரை நீக்காய்] இப்போதிவன் ஆரிடர் என்கிறது துக்க நிவ்ருத்தியைப் பண்ணுய் என்கிருனல்லன்; இப்பூ செவ்விமாறுங்காட்டில் திருவடிகளிலே இடுவித்துக்கொள்ளா யென்றபடி.'' என்றுள்ளது. [*செவ்வி மாறுங்காட்டில் என்றது—செவ்விமாறுவதற்கு முன்னே என்றபடி.] ஆக கஜேந்திராழ்வானுடைய துக்கநிவ்ருத்திக்காக எம்பெருமானெழுந்தருளினுனென வருமிடங்களிலெல்லாம் முதலையினுல் வந்த துக்கம் விவக்ஷிதமன்று, தான்பறித்த பூ பழுதாகிறதோ வென்கிற துக்கமே விவக்ஷிதமென்று சிக்ஷிக்கப்பட்டதாயிற்று. ஏவஞ்ச, கஜேந்திராழ்வானுடைய அபேக்ஷை விலக்ஷணமாகையாலும், எம்பெருமான் நேராக எழுந்தருளினுலல்லது அவ்வபேக்ஷை நிறைவேறமாட்டாதாகையாலும் '' கரிப்ரவரப்ரும்ஹிதே பகவதஸ் த்வராயை நம:'' என்னும்படி நேராகவந்து நிற்கவேண்டியதாயிற்று; த்ரௌபதிக்கு இப்படிப்பட்ட அபேக்ஷை இல்லை; மானபங்கமாகாதபடி காத்தருளவேணுமென்றிவ்வளவே அவளுக்கு அபேக்ஷிதமாயிருந்தது; அதற்குத் தக்கவாறு கண்ணபிரான் முகந்தோற்றுமே நின்று காரியத்தை நிறைவேற்றினுயிற்று.

62. ''கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணு மாம் தூரவாஸிநம்'' என்று பகவான் நிர்வேதப்படுகிறது எதுபற்றி? என்கிற மருமத்தை நன்கு உணரவேணும். அவள் '' ஹா க்ருஷ்ண த்வாரகாவாஸ '' என்றும் '' கோவிந்த புண்டரீகாக்ஷ '' என்றும் அழைத்தபோது கஜேந்திராழ்வானுக்குப்போலே நேரில் சென்று உதவப்பெற்றிலேனே! என்று நிர்வேதப்பட்டதாகச் சொல்லுகிறபொருள் இல்லையென்று சொல்லுவாரில்லை. திருவாய்மொழியில் (3-3-6) * வேங்கடங்கள் பாட்டின் ஈட்டில் —'' அப்போது ஸதஸ்ஸில் பிறந்த பரிபவம் பரிஹ்ருதமாகச் செய்தேயும் நம்பேரைச்சொல்லிக் கூப்பிட்டவளுக்கு ஆற்றுமையிலே முகங்காட்டப் பெற்றிலோமென்று உள்ளதனையும் இழவுபட்டிருந்தானிறே; நம் பேர் தன்காரியம் செய்த தத்தனைபோக்கி நாம் இவளுக்கு ஒன்றும் செய்திலோமிறே என்றிருந்தான்'' என்கிற ஸ்ரீஸூக்திகளை ஸேவியாநின்றோம். ஸாமாந்யமாக, லோகத்திலே துக்கமடைந்தவர்களை துக்ககாலத்திலே சென்று துக்கப்ரச்நம் பண்ணுவதென்று ஒன்றுண்டு; அது செய்யப்பெற்றிலோமேயென்று கண்ணபிரான் நிர்வேதப்பட்டதுண்டேயொழிய, அப்போதே சென்று விரோதிநிரஸனங்களைத் தலைக்கட்டாதொழிந்தோமேயென்று நிர்வேதப்பட்டமை இல்லை. 'அவள் என்னைக் கதறியழைக்கும்படியாக நான் தூரஸ்தனுயிருந்துவிட்டேனே! அந்தோ! என்பிறவி என்னுயிற்று! அவள் கூப்பிடவேண்டாதபடி அவ்விடத்திலேயே ஸந்நிஹிதனுயிருந்தேனுகில் முதல் தன்னிலே இவ்வாபத்தே விளைந்திருக்கமாட்டாதே! ஐயோ தூரஸ்தனுயிருந்து கெட்டேனே! என்று நிர்வேதப்படுகிறபடியாகவும் ஆசாரியர்களால் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. இது கண்ணபிரானுல் ஸ்வய

மேவ விவரிக்கப்பட்ட பொருள். எங்ஙனேயென்னில், ஸபார்வணி பதின் மூன்றாமத்யாயத்தில் தருமபுத்திரரை நோக்கிக் கண்ணபிரான் சொல்லுகையில் "நைதத் க்ருச்ச்ரமநுப்ராப்த:" இத்யாதிகளைச் சொல்லியிருக்கிறான். நீங்கள் கஷ்டத்தை யடைந்தகாலத்தில் நான் த்வாரகையில் இருந்திருந்தேனாகில் இப்படிப்பட்ட கஷ்டம் உங்களுக்கு நேர்ந்தேயிராது; முன்னாடியே வந்திருந்து சூதாட்டமே நடவாதபடி தடுத்திருப்பேனே யென்றான். அப்படி முன்னாடியே அங்கு எழுந்தருளியிராததுபற்றியே * கோவிந்தேதி யதாக்ரந்தத்* இத்யாதியாலே நிர்வேதம் காட்டினான் என்பதும் கொள்ளத்தக்கதே. அவள் கதறினவுடனே சென்று சேரப்பெற்றிலேனே யென்று நிர்வேதப்பட்டதாகக் கொள்வதிலும் குறையொன்றுமில்லை. இக்கொள்கையும் மறுக்கத்தக்கதன்று. கஜேந்திராழ்வானுக்கு உதவ ஸாக்ஷாத்தாக வரச்செய்தேயும் "திங்மாமிதி அநுகஜகர்ஜ மாஜகந்த" என்று பட்டரருளிச்செய்வது பாரீர். 'மாம் திக்! மாம் திக்!!' என்று முடிமேல் மோதிக்கொண்டே எழுந்தருளினதாகச் சொல்லிற்று. இது எம்பெருமானுடைய குணோத்கர்ஷப்ரகாசனத்திலே சொருகிநிற்குமத்தனை.

63. இனி முக்கியமான விஷயத்திற்கு வருவோம். "கஜேந்திராழ்வான் முதலை துணிபடவேணுமென்கிற விரோதி நிரஸநத்தைக் கருதாமல் எம்பெருமான் நேரில் எழுந்தருளி ஸேவை ஸாதிக்கவேணுமென்பதையே அபேக்ஷித்திருந்தானென்பது * நாஹம் களேபரஸ்யாஸ்ய.. ...* என்கிற கஜேந்த்ர கண்டோக்தியாலும் * தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே * என்கிற திருவாய்மொழியாலும் ஸுஸ்பஷ்டம்" என்று கீழே எழுதப்பட்டிருக்கிறது; இது பிராமாணிகர்களுக்குப் பரமபோக்யமானது, அசைக்கமுடியாதது. இதைக் கண்டிக்க அகாண்டமாக முயன்ற சிலர் எழுதியிருப்பதாவது— "கஜேந்திராழ்வான் முதலை துணி படவேணுமென்கிற விரோதி நிரஸநத்தைக் கருதாமல்—என்றது பொருத்தமுடையதன்று; (ஏனென்றால்) * பூந்தண்புனல் பொய்கை யானையிடர்கடிந்த * என்ற பாசுரத்தின் ஈட்டில் "முதலையாலே இடர்ப்பட்ட ஆனையினுடைய துக்கத்தைப்போக்கின" என்கிற பொருளும் அருளிச் செய்யப் பட்டுள்ளது"—என்று. இங்குக் கேண்மின். பூந்தண் புனல் பொய்கை யென்றவிடத்து "பூவிற் செவ்வி யழியாமே திருவடிகளிலே யிடவேணுமென்று நினைத்து அது பெறாமையால் வந்த விடரைப் போக்கின" என்று ஈட்டில் ஸ்பஷ்டமாகவுள்ளது. முன்னம் சப்தார்த்தமருளிச் செய்யப்பட்டு உடனே அது விசதீகரிக்கப்பட்டுளது. யானையினிடரைப் போக்கினதாக எவ்வெவ்விடங்களில் எழுதப்படுகிறதோ அவ்விடங்களிலெல்லாம் இந்த விவரணம் கொள்ளத்தக்கதே. ஒரு விஷயத்தை ஸாமான்யமாகச் சொல்லுவதென்றும் விசேஷமாகச் சொல்லுவதென்றும் இரண்டு ப்ரகாரங்கள் எங்குமுண்டு. ஸாமாந்யமாகச்

சொல்லுமிடங்களிலெல்லாம் விசேஷாநுஸந்தானம் அவர்ஜநீயமேயாகுமென்பது சாஸ்த்ரஜ்ஞகோஷ்டிகளில் ப்ரஸித்தம். முதலைவாய்க் கோட்பட்ட களிற்றின் இடரைப்போக்கினதாகச் சொல்லுமிடங்கள் ஸாமாந்ய கீர்த்தநஸ்தலங்களேயொழிய விசேஷ கீர்த்தநஸ்தலமாகாது. ப்ரக்ருதமுதாஹரித்த ஸ்தலத்தில் (ஈட்டில்) முந்துற ஸாமாந்ய கீர்த்தனமும் உடனே விசேஷகீர்த்தனமும் ஸுஸ்பஷ்டமாகவுள்ளது. இங்கே மூன்று துக்கங்கள் (ஈட்டில்) தெரிவிக்கப்பட்டிருக்கின்றனவென்றும், அம்மூன்றும் தனித்தனிப்பட்ட துக்கங்களேயொழிய, ஒன்று ஸாமாந்ய கீர்த்தனம் மற்றொன்று விசேஷ கீர்த்தனமென்று சொல்லுவதற்கு அவகாசமில்லையென்றும் சிலர் கருதக்கூடும். அது தவறு. இதனை நன்கு உபபாதிக்கிறோம். யானை முதலையின்வாயிலே அகப்பட்டுக்கொண்டது ஓரிடர்; கையில் பறித்த பூக்களை எம்பெருமான் திருவடிகளிலே ஸமர்ப்பிக்கப் பெறாமை மற்றோரிடர்; சரணாகதரக்ஷணம் செய்யாவிடில் எம்பெருமானுக்கு அவத்யமாகுமே என்னும் நினைவால் வந்த விடர் மற்றொன்று—என்றிப்படி மூன்று துக்கங்கள் என்று நினைக்கக்கூடும். கஜேந்திராழ்வான் தானே "நாஹம் களேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம்" என்று முக்த கண்டமாகச் சொல்லி யிருக்கையாலே முதலைவாய்க்கோட்பட்டதனாலுண்டான இடர் கஜேந்திரன் கருத்தாலன்று என்பது ஸ்பஷ்டமாயிற்று. கருணாமூர்த்தியான எம்பெருமானுடைய திருவுள்ளத்தில் அவ்விடர் உறைந்திருந்ததென்பது வாஸ்தவம். அவ்வளவே யொழிய கஜேந்திரபுத்தியால் அது இடரன்று. சரணாகதரக்ஷணம் செய்யாவிடில் எம்பெருமானுக்கு அவத்யமாகுமேயென்னும் நினைவாலாகுமிடர் கஜேந்திராழ்வானுக்கு மாத்திரமேயன்று; பக்தவர்க்கங்களுக்கெல்லா முள்ளதிது. "கிம் து த்வதக்ரே சரணாகதாநாம் பராபவோ நாத ந தேநுரூப:" என்கிற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியை யுற்றுநோக்கினால் மருமம் புலனாகும். ஆளவந்தார் "அபூதபூர்வம் மம பாவி கிம்வா ஸர்வம் ஸஹே மே ஸஹஜம் ஹி துக்கம்" என்று முன்னம் ஸாதித்தார்; எனக்கு துக்கம் ஸஹஜமாதலால் எந்த துக்கத்தையும் நான் ஸஹித்துக் கொள்வேன் என்றார்; "அப்படி ஸஹித்துக்கொள்வதானால் கதறுவானென்? ஸஹித்துக்கொண்டு கிடக்கலாமே" என்று எம்பெருமான் திருவுள்ளமாக, அதன்மேல் ஸாதிக்கிறார் [கிம் து த்வதக்ரே சரணாகதாநாம் பராபவோ நாத! ந தேநுரூப:] என்று. இதன் ஆழ்ந்த கருத்து என்ன வென்னில்; பிரானே! என்னைப்பற்றின துக்கங்களை நான் ஸகித்துக் கொள்ள முடியுமேயல்லது, உன்னைப்பற்றின துக்கம் என்றால் ஸஹிக்கப் போமோ? உன் பக்கலில் சரணாகதி பண்ணினவர்கள் பேறு பெறாமல் பரிபவப்பட்டார்களாகில் அதனாலாகும் அவத்யம் உன்னதன்றோ? உனக்கொரு இழுக்கு நேர்ந்தால் அதை என் போல்வார் ஸஹிக்க முடியுமோ? என்கை. ஆகவே மூன்றாவதாகக் கீழே காட்டப்பட்ட

துக்கம் கஜேந்திராழ்வானுக்குமட்டு மன்று என்பது தேறிநிற்கும். ஆதலால் இங்கு ஸாமாந்ய விசேஷந்யாயமே கொள்ளத்தக்கது. 'யானையிடர்' என்றால் ஸாமாந்யமாக யானை யடைந்த துக்கம் என்றதாகும்; அது எந்த துக்கமென்றால் கரஸ்த கமலங்களைத் திருவடிகளில் சாத்தப் பெறாமையாலுண்டான துக்கமென்று விசேஷித்து அறியப்படுகிறது. மூன்றாவதாகச் சொல்லப்படு மிடரும் இருக்கட்டுமே; அதுவும் விசேஷ ஸமர்ப்பகமேயென்னத்தட்டில்லை. கஜேந்திரன் நினைவால் முதலைவாய்க் கோட்பட்டது இடரன்று என்பது அனைவர்க்கு முடன்பாடான ஸித்தாந்தம்.

64. "த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்; கஜேந்த்ராழ்வானுக்குப் பலம் கைங்கர்யம்" என்று இருவர்க்கும் பலனிலுண்டான நெடுவாசியைக் காட்டி ஸ்ரீவசனபூஷணஸூக்தி ஸ்பஷ்டமாக அவதரித்திருக்க, த்ரௌபதிக்கு மாந ஹாநி பரிஹாரத்திற்கு மேற்பட்ட மற்றொன்று அபேக்ஷிதமாயிருந்ததென்றும், அது நிறைவேற வில்லையென்றும், அதனால் அவளுடைய ப்ரபத்தி பழுதாயொழிந்ததென்று நிர்ணயிக்கப் படுகிறதென்றும் சிலர் சொல்லுவதானது ஸ்ரீவசநபூஷணத்தோடு ஸர்வாத்மநா விரோதிக்குமது. அவளுடைய ப்ரபத்தி அப்போது அவள் கோலின பலனை நன்கு பெறுவித்தது. அதைத்தெரிவிக்கிற ஸ்ரீவசநபூஷணம் ஸுஸங்கதமே. முமுக்ஷுப்படியில் திருநாமப்ரபாவம் ப்ரஸ்துதமான விடத்திலே, ப்ரபத்தியின் உறுப்பான நாமஸங்கீர்த்தனத்திற்குப் பெருமை அருளிச் செய்ததும் ஸங்கதமே. ஆக உபயக்ரந்தங்களும் விரோத லேசமுமுடையனவல்லாமையால் விரோத ப்ரஸஞ்ஜனத்திற்கும் தத்பரிஹாரத்திற்கும் அவகாசமில்லை யென்றதாயிற்று. ... ... ... ... ... *

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசார்யஸ்வாமியின் ஸ்ரீஸூக்தியான

**ஜகதாசார்ய ஸூக்திஸுதாநிதி**

முற்றிற்று.

---

ஸ்ரீ:

# அடியேன்செய்யும் விண்ணப்பம்

(பண்டித A. சௌரிராஜய்யங்கார், அநுமார் கோவில் தெரு, மாம்பலம்.)

ஸ்ரீகாஞ்சீபுரம் ஸ்வாமிகள் வடதிசை நோக்கிச் சென்றுவிட்டாரென்றும், மூன்று மாதம்வரை இத்திசை நோக்காரென்றும் தெரிந்துகொண்ட சில விஷமிகள் ஆருமில்லாதவூரிலே அச்வமேத யாகம் நடத்துகிற கதையாய் "பயங்கரரின் விதண்டாவாதம்" என்றொரு நிந்தைக் காகிதத்தை வெளியிட்டார்கள். சாந்தியும் ஸத்வ குணமுமே வடிவெடுத்தவரான ஸ்ரீமத் காரப்பங்காடு ஸ்வாமிகளின் காலக்ஷேபகோஷ்டியின் சார்பாக அது வெளியிடப்பட்டதாகவும் பொய்யாகவே பிரசுரம் செய்யப்பட்டுவிட்டது. உலகில் ஸாத்விகரென்று ஒருவரைச் சொல்லவேணுமேயானல் காரப்பங்காடு ஸ்வாமிகளைத் தவிர வேறு யாரையும் முதல் விரலால் எண்ணமுடியாதென்பது ஸத்தியம். அப்படிப்பட்ட மஹாபுருஷர் ஒருகாலும் அநாமதேயமான நிந்தைக்காகிதங்களை வெளியிட அனுமதியளிக்கமாட்டாரென்பது திண்ணம்.

ஆனல் இரண்டு காரணங்களினல் அந்த மஹாபுருஷரும் இதில் ஸம்பந்தம் பெற்றவரே யென்பதைச் சிலர் நிரூபிக்க வருகிறார்கள். (1) அந்த ஸ்வாமிக்கு காஞ்சீபுரம் ஸ்வாமி ஸாதித்திருந்த ஸ்ரீமுகத்திலிருந்து சில வாசகங்களை உதாஹரித்திருப்பது. (2) இனிமேல் மஹான்கள் முன்னிலையில் வாதம் நடத்துவது தவிர இந்த விவாதத்தில் தாம் எழுத்து மூலமாகச் சிறிதும் ஸம்பந்தம் வைத்துக்கொள்ளப்போகிறதில்லையென்று ஸ்வாமி தெரிவிக்கிறார் என்றது. இவ்விரண்டு காரணங்களினல் ஸ்வாமியின் அனுமதியின்பேரில்தான் அந்த நிந்தைக் காகிதம் வெளிவந்ததென்று நிச்சயிக்கலாம் என்று சிலர் கூற முன்வருகிறார்கள். இவ்விரண்டு காரணங்களும் நம்பத் தகுந்தவையல்ல. காஞ்சீபுரம் ஸ்வாமியால் எழுதப்பட்ட ஸ்ரீமுகங்களை காரப்பங்காடு ஸ்வாமி ஏகாந்தமாகக் காப்பாற்றி வைத்துக்கொள்வதில்லை; காலக்ஷேப கோஷ்டிகளிலே அடிக்கடி வாசித்துக் காட்டுவதுண்டு. 'அதை இப்படி ஸாதிக்க வேணும்' என்று யார் கேட்டாலும் அவர்களிடம் கொடுத்துவிடுவதுமுண்டு. ஆதலால் முதல் காரணம் தேறாது. இரண்டாவதும் அப்படியே. "இந்த விஷயத்தில் இனிமேல் நான் எழுதத்தக்கது ஒன்றுமில்லை" என்று ஸ்வாமி சிலரிடம் ஸாதித்திருக்கக்கூடும். அதை விஷமிகள் பெருக்கி யெழுதியிருக்கிறார்களென்பதுதான் உண்மை.

அந்த காகிதத்தில் 11-வது பக்கத்தில் "தத்துவ நூல்களைப்பற்றிய அறிவிலும் உலகியலறிவிலும் துறைபோகிய பலர் காரப்பங்காடு ஸ்வாமியிடம் அன்பும் ஆதரவுங்கொண்டு பல்லாண்டுகளாக ஸம்பிரதாய ரகஸ்யங்களை அறிந்து வருகிறார்கள்" என்றெழுதியிருப்பது உண்மையான விஷயம். அப்படிப்பட்ட மஹான்களிலே சிலரோ ஒருவரோ முன்னின்று தம் பெயரை வெளியிட்டு ஏன் அந்த நிந்தைக்

காகிதத்தைப் பிரசுரம் செய்திருக்கக்கூடாது? அநாமதேயக் காகிதம் என்று அவத்யம் சொல்லும்படியாகவா ஒரு பிரசுரம் வெளியிடுவது? இது யார் செய்கிற காரியம். இனிமேல் ஒரு பெரியவருடைய பெயரால் பிரசுரம் வெளிவந்தாலுங்கூட அதற்கு கௌரவமில்லாமல் போய்விட்டதே. பெருமுயற்சிகள் செய்து படாதபாடும் பட்டு ஆளைத் தயார் செய்ததாகவன்றோ அர்த்தமாகும். முன்னடியே அந்த பாடுகள்பட்டிருக்கலாமே. இது ஆண்பிள்ளை செய்த காரியமாகத் தெரியவே யில்லையே. இந்த அதற்கணச் செயலை ஸ்ரீஸ்வாமி ஆமோதித்ததாக நினைப்பதற்கு அடியோடு இடமில்லை.

"வீண்வாதங்களில் பொழுதுபோக்கும் இயல்புடைய காஞ்சீபுரம் ஸ்வாமி சண்டைச் சுவடிகளை யெழுதிக் குவிப்பதில் வியப்பில்லை" என்று இப்படிப்பட்ட நிந்தைகளை காரப்பங்காடு ஸ்வாமி கனவிலும் நினைக்கமாட்டார். ஆமோதிக்கவும் மாட்டார். காஞ்சீபுரம் ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகளின் பெருமைகளைப்பற்றி எத்தனையோ மஹான்கள் எழுதி வெளியிட்டிருந்தாலும் காரப்பங்காடு ஸ்வாமி எழுதி வெளியிட்டிருக்கிற கட்டுரையே எல்லாவற்றினும் தலைமைபெற்று விளங்குகிறதென்பது உலகமெல்லாமிசைந்த விஷயம். அப்படி யெழுதின மஹாஸ்வாமி இப்போது ஸ்வல்ப விவாதத்திற்காகத் தம்முடைய திருவுள்ளத்தைத் தலைகீழாக மாற்றிக்கொண்டாரென்பது பாமரர்களுங்கூட நம்பமுடியாத விஷயமல்லவா? "ப்ரக்ருதம் சேர்ந்த விவாத விஷயத்தில் தம்முடைய கூற்றை ஸ்தாபித்துக்கொள்ள முடியாமையினாலே காரப்பங்காடு ஸ்வாமி அநாமதேயமாக நிந்திக்க ஆரம்பித்துவிட்டார்" என்கிற அபக்யாதியன்றோ ஸ்வாமிக்கு உண்டாகும். மஹான்கள் எப்போதும் விஷயவிசாரத்தில் கண்ணுங் கருத்துமாயிருப்பர்களே யல்லது முன்னுக்குப் பின்முரணாக நிந்திக்கத் தலைப்படமாட்டார்கள்.

ஸமீபகாலத்தில் வெளிவந்த ஹிண்டுவில் (அதாவது) நிகழும் ஜூலைமீ 10உ ஞாயிற்றுக்கிழமை வெளிவந்த (10—7—55) ஹிண்டு பத்ரிகையில் புத்தக விமர்சன ப்ரகரணத்தில் காஞ்சீபுரம் ஸ்வாமியின் ஒரு நூலைப்பற்றி மதிப்புரை வெளிவந்திருப்பதை உலகமெல்லாம் பார்த்திருக்கிறது. அந்த மதிப்புரையின் முடிவில் D. R. என்று கையெழுத்திட்டிருக்கிறது. சென்னையில் பிரபல அட்வகேட்டாக விளங்குபவரும், காரப்பங்காடு ஸ்வாமியைப்போலவே பரமஸாத்விகருமான ஸ்ரீமான் D. ராமஸ்வாமி ஐயங்காரே அந்த மதிப்புரை எழுதியவர் என்று தெரிய வருகிறது. காஞ்சீபுரம் ஸ்வாமி வருஷந்தோறும் தம்முடைய திருநக்ஷத்ரபூர்த்திக்கு அடையாளமாக அறுபத்திரண்டு உபந்யாஸமாலை யென்றும் அறுபத்துமூன்று உபந்யாஸமாலை யென்றும் அறுபத்து நான்கு உபந்யாஸமாலை யென்றும் இப்படி பல உபந்யாஸத் தொகுதிகளைப் பெரிய பெரிய புத்தகங்களாகப் பிரசுரம் செய்து வருகிறாரென்பதை உலகமறியும். ஸமீபத்தில் நடந்த அறுபத்துநான்கு திருநக்ஷத்ர பூர்த்திக்கு அடையாளமாக 64 கணக்கில் ஏழெட்டு உபந்யாஸ மாலைகள்

வெளியிடப்பட்டன; அவற்றுள் ஒரு மாலையில் த்ரௌபதீப்ரபத்தி விஷயவிசாரம் அமைந்திருக்கின்றது. சென்ற வருஷத்தில் வெளிவந்த அறுபத்துமூன்று உபந்யாஸமாலைக்கே 10—7—55 ஹிண்டுவில் மதிப்புரை D. R. ஸ்வாமி வாயிலாக வெளிவந்திருக்கின்றது. அது ஆங்கில பாஷையில் இருப்பதால் அதற்குச் சரியான மொழிபெயர்ப்பு இதன் கீழ் வெளியிடப்படுகிறது; (முக்கியமான ஒருபாகம் வெளியிடலாகிறது.)

ஹிண்டு ஜுலை 10உ 1955.

"அறுபத்துமூன்று உபந்யாஸமாலை.

காஞ்சீபுரம் P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் 63-வது திருநக்ஷத்ரத்தின் ஞாபகார்த்தமாக வெளிவந்துள்ள இந்த புத்தகம் ஸ்ரீவைஷ்ணவ மதசம்பந்தமான விஷயங்களை பலவிதங்களில் எடுத்துரைப்பதாயும் 63 வியாஸங்களோடு கூடியதாயுமுள்ளது. ஸம்பிரதாய விஷயங்களை எடுத்துரைப்பதில் மிகத் திறமை வாய்ந்தவராக விளங்கும் அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் வியாஸங்கள் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாய விஷயங்களை உபந்யஸிப்பவர்களுக்கு வழிகாட்டியாக விளங்குமென்பதில் ஐயமில்லை..."

என்பது மதிப்புரையிலுள்ள முக்கியமான வாசகம். காரப்பங்காடு ஸ்வாமியின் வாதங்களுக்கு மறுப்பான விஷயங்கள் எந்த ஸ்ரீராமாநுஜன் பத்ரிகையில் (77, 78) வெளிவந்திருக்கின்றனவோ அந்த பத்ரிகையிலேயே ஷை D. R. ஸ்வாமிக்கும் மறுப்பாக 120 பாராக்கள் கொண்ட பெரியதொரு புத்தகம் வெளிவந்திருக்கின்றது. அதைக் கண்டவரான அந்த D. R. ஸ்வாமி, மேலே உதாஹரித்த மதிப்புரையை இந்தவிதமாக எழுதிக்கொடுக்க ப்ரமேயமில்லையே யென்று பாமரர்கள் நினைக்கலாம். உண்மையை மறைக்க மாட்டாத உத்தம சீலர்கள், தம்முடைய வாதத்திற்கு மறுப்பு வந்துவிட்டதே யென்கிற அற்ப காரணத்தினால் தம் மனச்சாக்ஷிக்கு மாறாக ஒருபோதும் ஓரெழுத்தும் எழுதமாட்டார்களன்றோ. காஞ்சீபுரம் ஸ்வாமியின் பலவகையுபந்யாஸங்களைக்கொண்ட நூல்களானவை ஆங்காங்குள்ள உபந்யாஸகர்களுக்கு வழிகாட்டியாகவுள்ளவை என்று உள்ளது உள்ளபடியே D. R. ஸ்வாமி எழுதியிருப்பதானது மிகவும் ஸத்யமான விஷயமல்லவா?

"யச:காயேந ஜீவிதி" என்னப்பட்டவர்களில் தலைவரான ஸ்ரீமத் ராமநாதபுரம் ராகவையங்கார் ஸ்வாமிகள் ஒருஸமயம் மதுரை ஸத்ஸம்பிரதாய ஸபையில் தலைமை வஹித்தபோது காஞ்சீபுரம் ஸ்வாமி விஷயமாக ஒரு வெண்பாவை இயற்றி வெகுவிரிவாக உபந்யஸித்ததாய் அப்போது பத்ரிகைகளில் பிரசுரமாகி யிருந்தது; அந்த வெண்பா

"அண்ணங்க ராசிரியர் அற்புதமாம் நூல்கள்தமைப்
பண்ணித் தருகையினால் பாமரரும்—மண்ணுலகில்
நான்சொல்லுகேனதனை நன்றுரைக்கேன் நானென்று
தாஞ்சொல்ல முன்வருவர் தாம்." என்பதாம்.

இதன் கருத்தை நாம் வியாக்கியானம் செய்யவேணுமோ? ஆயினும் சுருக்கமாக உரைசெய்வோம். காஞ்சீபுரம் ஸ்வாமிகள் அற்புதமாக வெளியிட்டுள்ள நூல்கள் அளவு கடந்தவை. நாலாயிர திவ்யப்ரபந்தங்களுக்கு மிகவிரிவான திவ்யார்த்ததீபிகையுரை; [இது ஒரு பாஷையிலன்று; ஸ்வாமிக்குத் தெரிந்த ஸகல பாஷைகளிலும்.] மற்றும் ஆளவந்தார் முதல் மணவாளமாமுனிகள் வரையிலுள்ள பூருவாசாரியர்கள் வடமொழியிலும் தென்மொழியிலும் அருளிச் செய்திருக்கின்ற சிறியவையும் பெரியவையுமான க்ரந்தங்களுக்கெல்லாம் பெரும்பாலும் வியாக்கியானங்கள்; [இவையும் ஒரு பாஷையில் மட்டுமல்ல.] வியாக்கியானங்களாகவல்லாமல் ஸ்வதந்திரமாகவும் பல க்ரந்தங்கள்; ஆயிரக்கணக்கான உபந்யாஸங்கள் காஞ்சீபுரம் ஸ்வாமியால் வெளியிடப்பட்டவை, நாளைக்கும் வெளிவந்து கொண்டிருப்பவை. இவற்றை ஆதாரமாகக்கொண்டே ஆங்காங்கு உபந்யாஸகர்கள் தம் தம் உபந்யாஸங்களை நடத்திவருவதாக ராமநாதபுரம் ராகவையங்கார் ஸ்வாமி கண்டறிந்து வெளியிட்டதில் பொய்ம்மை சிறிதுமுண்டோ? சென்னையில் பலபகுதிகளில் பலமஹான்கள் உபந்யாஸங்கள் நடத்திவருகிறார்கள். ஓரிடத்தில் திருமாலை; மற்றோரிடத்தில் திருநெடுந்தாண்டகம்; வேறோரிடத்தில் திருவாய்மொழி; இன்னோரிடத்தில் ஞானஸாரம்...... இப்படியாக உபந்யாஸங்கள் நடந்துகொண்டிருப்பது பக்தவர்க்கங்களுக்குத் தெரியுமே. அங்கங்கே சென்று கேளுங்கள்; காஞ்சீபுரம் ஸ்வாமியின் வியாக்கியான நூல்களைக் காணுங்கள்; இவற்றால் அந்தந்த உபந்யாஸகர்கள் எவ்வளவு உபயோகமடைந்து வருகிறார்களென்பதை ஒரே நிமிஷத்திற் காணலாம்.

ஆண்டுதோறும் மார்கழி மாதம் வருகிறது. அடுத்தபடியாகவும் வரப்போகிறது. திருப்பாவையுபந்யாஸங்கள் நடைபெறுமிடங்களிற் சென்று கேளுங்கள். காஞ்சீபுரம் ஸ்வாமி திருப்பாவைக்கு மிகவும் விரிவாக ஸம்ஸ்க்ருத வியாக்கியானமும் அச்சிட்டு வெளியிட்ட பின்பு பண்டிதர்களுக்குப் பரம ஸௌக்யமாய்விட்டது. நாம் இப்படியெழுதுவது ஒவ்வொருவருடைய அநுபவத்திற்கும் அவசியம் வரவேண்டும். வந்திருக்கவுங்கூடும். உபந்யாஸகரத்னமாயும் ஹரிகதா காலக்ஷேபமணியாயும் விளங்கும் ஸ்ரீ உவே. வித்வான் ஸ்ரீ ரங்கம் சடகோபாசார்ய ஸ்வாமி யொருவரே தம்முடைய சொற்பொழிவுகளில் அஸூயாலேசமுமில்லாமல் காஞ்சீ ஸ்வாமியின் வியாக்கியான நூல்களின் உபயோகப் பெருமைகளை உலகமறியப் பேசிவருகின்றவர். அந்த ஸ்வாமியின் திருவாக்கிலிருந்து இதை என்னைப்போன்றவர்கள் ஓரிடத்திலன்று, பலவிடங்களில் பலதடவைகள் கேட்டிருப்பர்கள். இத்தகைய உதார குணம் ஸ்ரீ மத் காரப்பங்காடு ஸ்வாமியிடத்திலும் குறைந்ததன்று.

மற்றபேர்கள் சொல்லுவதும் எழுதுவதும் நிற்க: ஸ்ரீமத் D. R. ஸ்வாமி தமது மதிப்புரையில் “ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமியின்

வியாஸங்கள் ஆங்காங்கு உபந்யாஸகர்களுக்கு வழிகாட்டியாயிருக்கும்" என்று எழுதியிருப்பதுண்டே, இதை நடுநிலைமையிலுள்ளவர்கள் கவனிக்க வேண்டும். காஞ்சீ ஸ்வாமியின் 63 உபந்யாஸமாலை யென்கிற புத்தகம் ஸமீபகாலத்தில் வெளிவந்ததன்று; சென்ற ஆண்டில் வெளிவந்தது. அதற்குப் பல பத்ரிகைகளிலும் அப்போதே மதிப்புரை வெளிவந்துவிட்டது. ஹிண்டுவில் மட்டுமே இப்போது தாமதித்து வெளிவந்தது. இந்த ஸந்தர்ப்பத்தில் இது இவ்விதமாக வெளிவந்ததை நோக்குங்கால், மேலே சொன்ன விஷமிகளின் துராக்ருதமான நிந்தைக்கு மறுப்பாகவே பகவானால் இது பிரசுரம் செய்விக்கப்பட்டதென்று நன்குணரலாம். அளவுகடந்த அஸூயை குடிகொண்ட விஷமிகள் எதையெழுதினாலும் கேட்பாரில்லையென்று நினைக்கிறார்கள் போலும். யார் எதையெழுதினாலும் அச்சுக்கூடங்கள் ஏற்றுக்கொள்ளத் தடைசெய்யாது. மை படியமாட்டேனென்னாது; காகிதம் தாங்கிக்கொள்ள மாட்டேனென்னாது. ஆனால் உண்மையறிவாளிகள் உடனுக்குடனே அவற்றை உதறித்தள்ளுவர்களென்பது உறுதி.

விஷமிகள் எது வேணுமானாலும் எவ்வளவு வேணுமானாலும் எழுதட்டும். அதற்காக யாரும் கவலைப்படமாட்டார்கள். மஹாஸாத்விகரான ஸ்ரீமத் காரப்பங்காடு ஸ்வாமிகள் இந்த அதர்க்கண நிந்தைக்கு ப்ரவர்த்தகர் என்று அஸப்யமான ஒரு அபக்யாதியை அந்த மஹானுக்கு உண்டாக்க முன் வந்தார்களே இதுதான் மிகவும் வெறுக்கத்தக்கது. காரப்பங்காடு ஸ்வாமி இதில் ஸம்பந்தப்பட்டிருந்தது உண்மையாயிருந்தால் முக்கியமான விஷயவிசாரம் ஒன்றுதான் இதில் அழகாக வெளிவந்திருக்கும். தவிர, அந்த நித்தைக் காகிதத்தில், விஷயத்திலே நோக்காக எழுதியுள்ள ஸ்வல்ப பாகமும் அந்த ஸ்வாமியினுடைய திருவுள்ளத்திற்கு பிரதிகூலமானதேயொழிய அநுகூலமானதன்று. அதில் 4-வது பக்கத்தில் "உலகாசிரியரே வேறோரிடத்தில் [பாண்டவர்களையும் நிரஸிக்க ப்ராப்தமாயிருக்க, வைத்தது த்ரௌபதியுடைய மங்கள ஸூத்ரத்துக்காக. அர்ஜுநனுக்கு தூத்யஸாரத்யங்கள் பண்ணிற்றும் ப்ரபத்த்யுபதேசம் பண்ணிற்றும் இவளுக்காக] என்றருளிச் செய்கையால் இந்தப் பரிஹாரம் மிகவும் பொருத்தமாக இருக்கிறது" என்றெழுதியுள்ளது. இது அந்த ஸ்வாமியின் திருவுள்ளத்திற்கு நேர்விரோதமானது. 'இந்தப் பரிஹாரம் மிகவும் பொருத்தமாக இருக்கிறது' என்றதற்கும் மேலே உதாஹரித்த ஸ்ரீஸூக்திகளுக்கும் என்ன ஸம்பந்தமென்பதை இவர்களே உபபாதித்துக் காட்டத்தொடங்கினால் அப்போது இவர்களுக்கே இது தெற்றென விளங்கும். த்ரௌபதி பண்ணின சரணாகதிக்கு பகவான் காலக்ரமேண பரிபூர்ணமாகப் பலனளித்தானென்பதன்றோ மேலே குறித்த ஸ்ரீஸூக்திகளினால் தேறினது. மூலத்தில் (இவளுக்காக) என்றிருக்குமதுக்கு (இந்த த்ரௌபதிக்காக) என்றிவ்வளவே பொருள் பணிக்க வேண்டியிருக்க, மணவாள மாமுனிகள் "சரணாகதையான

விவள் ஸங்கல்பத்தின்படியே......" இத்யாதிகளையருளிச் செய்திருப் பதை நோக்கவேணும்.

"காஞ்சீஸ்வாமி தம்முடைய கொள்கையை நிலைநாட்டாமல் வீணுகப் பக்கங்களை வளர்த்திருக்கிருர்" என்று ஊர்பேரில்லாத தூஷகர் ஆரம்பத்திலேயே எழுதுகிருர். ப்ரஸித்தரான ஒரு பண்டிதர் தம்முடைய பெயரை நாடு நகருமறிய வெளியிட்டுக் கொண்டு இப்படிப் பட்ட தூஷணையை எழுதியிருந்தால் சிலராவது இதை மெய்யென்று இரண்டொரு நாள் நம்பியிருக்கக்கூடும். ஒன்றுந்தெரியாத பாமரர்கள் மயங்குவதற்கும், அல்பஸந்தோஷத்தையடைந்து ஸ்வல்பகாலம் கொக் கரிப்பதற்குமேயன்றோ இந்த நிந்தைக்காகிதம் உபயோகப்படும். ஆண்பிள்ளையாயிருந்தால் இப்படி ஊர்பேரில்லாமல் நிந்தித்து விட்டுத் தலைமறையமாட்டார். தசரதசக்ரவர்த்தியிடம் இராமபிரானது திருக் குணங்களை எடுத்துரைக்கின்ற நகரத்து ஜனங்கள் "யதா வ்ரஜதி ஸங்க்ராமம் க்ராமார்த்தே நகரஸ்ய வா, கத்வா ஸௌமித்ரிஸஹிதோ நாவிஜித்ய நிவர்த்ததே." என்கிருர்கள். இராமன் யுத்தத்திற்குச் சென்ருல் வெற்றி பெருமல் திரும்புவதில்லை என்று சொல்லப்படுகிறது. அதுபோலவே காஞ்சீஸ்வாமி விவாதங்களில் இறங்கிஞல் தம்முடைய வாதத்தை நிலைநாட்டாமல் நிற்பதில்லை என்பதைப் பலவாண்டுகளாக உலகம் பார்த்து வருகிறது.

ப்ரக்ருதம் த்ரௌபதீப்ரபத்தி விஷயத்தில் காஞ்சீஸ்வாமி, விவா தத்தை தாம் ஆரம்பிக்கவில்லை. "என்னைக் கேட்டவர்களுக்கு என் னபிப்ராயத்தை நான் தெரிவித்தேனத்தனை" என்றே பன்முறையும் எழுதியிருக்கிருர். அப்படியிருந்தும் விவாதம் வீணுக வளர்ந்திட்டது. யாரால் வளர்ந்திட்டது என்பதை நிர்ணயிக்க யாருக்கும் சிரமமில்லை. "பயங்கரரின் விதண்டாவாதம்" என்கிற நிந்தைக் காகிதத்தை வெளி யிட்டவர் நிந்தைகளை நிறுத்தி விவாத விஷயத்தில் நிலைநின்று, இவ் விஷயத்தில் 64 பாராக்கள் கொண்ட காஞ்சீஸ்வாமியின் அமுதக்கட லான வியாஸத்தை ஒவ்வொரு பாராவாக எடுத்து மறுப்புரைக்கட்டும். எந்தெந்த பாராக்கள் மறுக்க வேண்டாதவை யென்று தோன்று கிறதோ, அந்த பாராக்களின் லக்கங்களை வரிசையாகக் குறிப்பிட்டு 'இந்த பாராக்களை உபேக்ஷித்து விட்டோம்' என்றெழுதி விடட்டும். மறுக்கத்தக்க விஷயமுள்ள பாராக்களை மட்டும் ப்ரமாணங்களைக் கொண்டு மறுக்கட்டும். அப்போதன்றோ "தம்முடைய கொள்கையை நிலைநாட்டாமல் வீணுகப்பக்கங்களை வளர்த்திருக்கிருர்" என்று அநாமதேயர் எழுதியுள்ள தூஷணம் உண்மையாக யாரிடத்தில் சார் கின்றதென்பதை உலகம் காணும்.

காஞ்சீஸ்வாமியின் 64 பாராக்கள் கொண்ட வியாஸத்திற்கு மறுப்பெழுத வேணுமென்பதுகூட அபேக்ஷிதமன்று. ஸ்ரீலோகா சார்ய ஸூக்திகளுக்குள் பரஸ்பரவிரோதமே கிடையாதென்றும்,

விரோதமிருப்பதாக வைத்துச் செய்திருக்கிற பரிஹாரம் யுக்தமன்று என்றும் இந்த விஷயத்தை காஞ்சீஸ்வாமி ஒருவருடைய பெயரையும் தொடாமல் எப்படி லோகாபிராமமாக நிரூபணம் செய்திருக்கிறாரோ, அப்படி ஒரு பண்டிதர் எழுந்து 'விரோதமுண்டுதான், விரோதபரிஹாரம் அவசியந்தான், பரிஹாரப்ரகாரம் இதுதான்' என்று காட்டி ஒருவர் பெயரையும் தொடாமல் லோகாபிராமமாக எழுதி வெளியிடட்டும். அதனால் உலகம் உண்மையுணர்ந்து கொள்ளட்டும்.

காஞ்சீஸ்வாமியை வீணை நிந்திக்க வேணுமென்றும், அவர் தூஷிக்கிறாரென்று பொய்ப்பிரசாரம் செய்து முக்கியமான விஷய விசாரத்தை மறைத்துவிட வேணுமென்றும் இவ்வளவே ஆசை கொண்டவர்களுக்கு இந்த வழிகள் அடியோடு ருசிக்கமாட்டாவென்பதை யறிவோம். ஸ்ரீ உ.வே. பண்டித. V. P. ரங்காசாரியர் ஸ்வாமியின் வெளியீட்டில் மூன்று வார்த்தைகளை ஸாரதமமாக ஒரு ரஸிகர் எடுத்துரைத்தார். அவையாவன; (1) "இப்படி யழுகிறவர்கள் மற்றும் பலருளர்; அவர்களோடு சேர்ந்து *வாயுந்திரையுகளுமநுஸந்தானமாகலாம்." (2) "ஆய்ச்சியாகிய வன்னையால் (6-2-11.) என்ற திருவாய்மொழிப்பாசுரத்தின் ஈட்டில் அருளிச்செய்துள்ள விநோதகதைதான் நினைவுக்கு வருகிறது." (3) "இந்த மார்க்கங்களில் ஒன்றிலும் புத்தி செல்லாமல் ஊர்பேர் தேதியொன்றுமில்லாத நிந்தைக்கந்தைகளை வெளியிடத்தான் எங்கள் கோஷ்டிக்கு ஸாத்யமாகுமென்னில் அதைத் தடுப்பாராருமில்லை அப்படியே நடக்கட்டும்." என்னுமிவை.

பகவானுடைய விபவாவதாரங்களில் ஸ்ரீ ராமக்ருஷ்ணாதிகளின் சக்திவிசேஷங்களை மிக நன்றாக அறிந்துவைத்தும், *வல்லரக்கர் புக்கழுந்த* என்று நம்மாழ்வார் ஸாதிக்கும்படியாக அரக்கருமசுரரும் தயரதன்பெற்ற மரதகமணித்தடாகத்திலே தாமாகவே வந்து விழுந்து முடிந்தனரென்று பழங்கதை கேட்டிருந்தோம். அதை இப்போது ப்ரத்யக்ஷமாகப் பார்த்து மெய்யேயென்று நம்புகிறோம்.

ஸ்ரீ காரப்பங்காடு ஸ்வாமியின் விரோத பரிஹாரமென்கிற வியாஸம் 13 வருஷங்களுக்கு முன்னமே வெளிவந்ததென்பதை யாரும் மறுக்கமாட்டார். அதுவே மறுபடியும் பக்தனில் ஆவச்யகமாகவோ அநாவச்யகமாகவோ வெளியிடப்பட்டது. அதிலிருந்தே இவ்வளவு விவாதக் கிளர்ச்சி ஏற்பட்டதாகச் சொல்லப்படுகிறது. அஸ்து. விரோதபரிஹாரமென்கிற அந்த வியாஸம் வெளியான பிறகு காஞ்சீபுரம் ஸ்வாமி வெளியிட்ட வியாஸம் இன்னதென்பதை "பயங்கரரின் விதண்டாவாதம்" என்கிற நிந்தைக்காகிதம் உள்ளபடி எடுத்துக்காட்டியிருக்கிறது. அதில் 5வது பக்கம் ஆரம்பம்—"இப்படி காரப்பங்காடு ஸ்வாமி இந்த விஷயத்தை உபபாதித்திருக்கிறார். இதைக் கண்டதுமே ஸ்ரீ. பிர. அ (காஞ்சீஸ்வாமி) பிரளயம் நேர்ந்ததுபோலச் சீறிக்கொண்டும் அலறி மேல்விழுந்து கொண்டும் ஸ்ரீ ஸூக்திகளின்

ஐககண்ட்யம் என்றவொரு வியாஸத்தை யெழுதி பக்தனுக்கு அனுப்பினார்" என்றிருக்கிறது.

இந்த ஒரு விஷயத்தை மட்டும் எடுத்துக் கொள்வோம். காரப்பங்காடு ஸ்வாமியின் விரோதபரிஹாரமென்கிற வியாஸத்தைக் கண்டவுடனே காஞ்சீபுரம் ஸ்வாமி சீறிக்கொண்டும் அலறி மேல்விழுந்து கொண்டும் ஐககண்ட்ய வ்யாஸத்தை எழுதினாரென்று தெரிவிக்கிற இந்த விதண்டாவாதக் காகிதமானது உண்மையாக ஸ்ரீஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டியார் சார்பில் வெளியிடப் பெற்றதாயிருக்குமாயின் அந்த காலக்ஷேப கோஷ்டியைச் சேர்ந்த மஹான்களில் ஒருவராவது இதை விமர்சிக்கத் திறமையில்லாதவராகவா இருப்பர்? காஞ்சீ ஸ்வாமியின் ஐககண்ட்ய வ்யாஸந்தானே விவாதத்திற்கு மூலமானதென்று (அல்லது) ஆஸ்பதமானதென்று இவர்களால் காட்டப்படுகிறது. அந்த வியாஸம் அச்சாகி வெளி வந்திருப்பதுதானே. அதில் காரப்பங்காடு ஸ்வாமியைப்பற்றியோ, அவரைச்சார்ந்தவர்களைப்பற்றியோ, வேறு எந்த நபர்களைப்பற்றியோ பக்தனைப்பற்றியோ கிஞ்சித்தாவது ப்ரஸ்தாவமுண்டா? கடுஞ்சொல்லா உண்டா? அணுவளவு இருந்தாலும் எடுத்துக் காட்டட்டும். இ[illegible]தை எப்படி காட்டமுடியும்?

காட்ட முடியவில்லையென்று தீர்ந்து விட்டால் 'காரப்பங்காடு ஸ்வாமியின் வியாஸத்தைக் கண்டதுமே காஞ்சீஸ்வாமி பிரளயம் நேர்ந்து விட்டதுபோல் சீறிக்கொண்டும் அலறி மேல்விழுந்து கொண்டும் ஐககண்ட்ய வ்யாஸத்தை யெழுதினார்" என்று ஒருவழிப்போக்கர் வரைந்து வெளியிட்டிருப்பதானது வீணான மாச்சரியத்தை வளர்ப்பதற்காகவே யென்பது வெளிப்படை. உண்மைக்குமாறாக அஸம்பத்தமாயெழுதி தூஷித்திருப்பதுமல்லாமல், இது காரப்பங்காடு ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டியின் மூலமாக வெளியிடப்பெற்றதென்றும் ஒரு அபத்தம் எழுதி, பரமஸாத்விகரான அந்த மஹானுக்கும் வீணான அபக்யாதியை விளைவித்ததானது திருவல்லிக்கேணி வாஸிகளான பிராமாணிகர்களால் அவசியம் கண்டிக்கத் தக்கதென்பதில் ஐயமுண்டோ?

ஸ்ரீமான் உ-வே. பண்டித V. P. ரங்காசாரியர் ஸ்வாமி வெளியிட்ட "அநாம தேயரின் ஆத்திரம்" என்னும் உண்மையுரைப் புத்தகமும், கள்ளக்குறிச்சி அட்வகேட், ஆராவமுதுதாதாசாரியர் ஸ்வாமி ஆங்கிலத்திலும் தமிழிலும் தெலுங்கிலும் விஷய தத்துவங்களை வெகு விசதமாக விவரித்து வெளியிட்டிருக்கிற லோகாசார்ய ஸ்ரீஸூக்தி ஸாமரஸ்யமென்கிற புத்தகமும் உலகம் பரவியிருப்பதால் ப்ரக்ருத விவாத ஸம்பந்தமான ஸகலதத்துவங்களும் அவற்றால் விசதமாகும். இவற்றையெல்லாம் கடாக்ஷித்தருளும் ஸ்ரீகாரப்பங்காடுஸ்வாமிகள் இந்த நிலைமையில் தமக்கு கர்த்தவ்யம் இன்னதென்பதை உணராதில்லாதவரல்லர். உணர்ந்து, செய்வன திருந்தச் செய்வதே நலம்.....*